ஆல்பட் A/C சக்தி அபிராமி A/C 4 காட்சிகள்
தூரியன் A/C 3 காட்சிகள் M.M. தியேட்டர் A/C 4 காட்சிகள்
மற்றும் தமிழகமெங்கும்

AVM 50 GOLDEN

ஏவிஎம்மின்

# மின்சார கனவு

MAX

ராஜீவ் மேனன்
A.R.ரஹ்மான் வைரமுத்து V.C.குகநாதன்

AVM PRODUCTIONS

M.சரவணன் M.பாலசுப்ரமணியன் M.S.குகன்

# முதல்வர் விடுத்த எச்சரிக்கை!



"இதுபோன்ற புகார்கள் மீண்டும் வருமானால் கடுமையான நடவடிக்கை எடுக்கப்படும்" என்று எச்சரிக்கை விடும்விதமாக சமீபத்தில் ஒரு திருமண விழாவில் பேசினார் முதல்வர். எது போன்ற புகார்கள்? இந்தப் பேச்சுக்கு ஒரு பின்னணி உண்டு!

அடிக்கடி கலைஞரைச் சந்தித்து, தனிப்பட்ட முறையில் பேசும் வாய்ப்பைப் பெற்ற ஓர் உடன்பிறப்பு இப்போது மாநகராட்சி கவுன்சிலர். 'தலைவர் அதைச் சொன்னார்; இதைச் சொன்னார்' என்று லோக்கல் உடன்பிறப்புகளிடம் 'பீலா' விட்டு அவர்களை டென்ஷனில் வைத்திருப்பாராம் இந்த கவுன்சிலர். அவர் பகுதியிலுள்ள வியாபாரிகளிடம் 'போஸ்டர் அச்சடிக்கணும்; மீட்டிங் போடணும்; பொன்னாடை போர்த்தணும்' என்று கலெக்ஷனில் பிஸியாக இருந்தாராம். ஒரு மீட்டிங்கிற்குப் பொன்னாடை போர்த்த பணம் வேண்டும்' என்று வசூல் செய்திருக்கிறார் அவர். ஆனால் கூட்டத்தில் யாருக்கும் பொன்னாடை போர்த்தப்படவில்லை!

இதைக் கண்டு ஷாக்காகிப் போன வியாபாரிகள், கவுன்சிலரிடம், 'பொன்னாடைக்குன்னு வசூல் செஞ்சீங்க. ஆனால் போர்த்தலியே' என்று விசாரித்திருக்கிறார்கள். கடுப்பாகிப் போன கவுன்சிலர், 'பணம் கொடுப்பதோடு உங்க டூட்டி முடிஞ்சி போச்சு! நான் பொன்னாடை போர்த்தறேனா இல்லையா என்றெல்லாம் பார்ப்பது உங்க வேலை இல்லை' என்று எரிந்து விழுந்திருக்கிறார். 'ஓகோ! விஷயம் இந்த அளவுக்கு வந்து விட்டதா?' என்று வெகுண்டெழுந்த வியாபாரிகள் சங்கத்தினர், ஒன்று திரண்டு கலைஞரிடம் எல்லாவற்றையும் விளக்கிப் புகார் கொடுத்து விட்டனர்.

இந்தச் சம்பவத்தை நமக்குச் சொன்ன வியாபாரிகள் சங்க பிரமுகர் ஒருவர், "முதல்வர் கவனத்துக்குக் கொண்டு சென்றவுடன் அவர் எச்சரித்துப் பேசியது எங்களுக்கு மிகவும் ஆறுதலாக இருந்தது. ஆட்சிக்கும் கட்சிக்கும் கெட்ட பெயர் வரக் கூடாது என்பதில் அவர் மிகவும் உஷாராக இருக்கிறார்!" என்றார்.

இந்தச் சம்பவம் இப்படி இருக்க, சமீபத்தில் பிறந்த நாள் விழா கொண்டாடிய வடசென்னை (கழக) எம்.எல்.ஏ. ஒருவர் காட்டில் அட்வான்சாகக் கோடை மழையாம்!

தி.மு.க. ஆட்சியில் யாருக்கு காரியங்கள் நடக்கிறது? "கூட்டாயம்; த.மா.கா.வினருக்குத் தான்!" என்கிறார் ஒரு கழகப் பிரமுகர். "சுத்தமான ஆட்சி கொடுக்கணுங்கறதுல தலைவர் உறுதியாக இருக்கார். அதனால் எங்களுக்கு சிபாரிசு செய்வதென்றால் தயக்கம் + பயம். ஆனால் த.மா.காவினருக்கு அப்படியல்ல; முதல்வரிடமே சிபாரிசு சீட்டை நீட்டுகிறார்கள். காரியமும் நடக்கிறது!" என்றார் அவர்.

- திலீப்பா



# சோ செய்த மிமிக்ரி!

**த**மிழ்ச் சினிமா ரசிகர், கடந்த மார்ச் எட்டு அன்று மாலை நடந்த ஏவி.எம். பொன் விழாவுக்கு வந்திருந்தால், ஜென்ம சாபல்யம் அடைந்திருப்பார். அந்தக் காலத்து தேவிகா, சரோஜாதேவி முதல் இந்தக் காலத்து ஊர்வசி, பிரபுதேவா, அரவிந்த்சாமி வரை அத்தனை பேரும் ஆஜர்.

● திரையுலக 'பெரிசு'கள் எல்லாம், ஒருவரையொருவர் குசலம் விசாரித்தது என்ன? கைகுலுக்கியது என்ன? காலில் விழுந்து கொண்டதென்ன? கட்டிப் பிடித்துக் கொண்டதென்ன? என்ன?... என்ன?...

● விழாவுக்கு முன்னதாக கங்கை அமரன் குழுவினரின் மெல்லிசை. ஏவி.எம். படங்களிலிருந்து மட்டுமே பாடல்கள் இடம்பெற்றன. களத்தூர் கண்ணம்மா பாட்டான, 'அம்மாவும் நீயே! அப்பாவும் நீயே!' பாடலை அதே பழைய குரலில் எம்.எஸ். ராஜேஸ்வரி பாடினார். அன்று திரையில் கைகூப்பி வாயசைத்த சின்னப் பையன் கமல், இன்று கறுத்த தாடி, மீசையுடன் விழாவுக்கு வந்திருந்தார். எஸ்.பி.பி. 'நிலவே என்னிடம் நெருங்காதே' பாடினார்.

● சன் டீ.வி., 3 ரோஸஸ் மின்சாரக் கனவு எக்ஸ்பிரஸ் ரயிலில் சென்னைக்கு அழைத்து வரப்பட்ட ரசிகர் படை, தனி சிருடையில் வந்து பளிச்சென்று தெரிந்தது.

● வெள்ளை வேட்டி, சட்டை, துண்டு அணிந்து சிவாஜி. வயதாகி விட்டாலும் பழைய கம்பீரத்தில் பானுமதி ராமகிருஷ்ணா, இழுத்துப் போர்த்திய புடைவைத் தலைப்பில் அடக்கமான வாணி ஜெயராம். படியேறி மேடைக்குப் போக மிகவும் சிரமப்பட்டாலும் விட்டுக் கொடுக்காமல் வந்து பங்கேற்ற டி.கே. பட்டம்மாள், சாலை விபத்தில் வலது கை இழந்து, சால்வையால் போர்த்தியபடி பண்டரிபாய், பட்டு வேட்டி பட்டு சட்டை, கறுப்பு கண்ணாடியில் எஸ்.எஸ். ஆர். வெள்ளை பாண்ட், சட்டையில் கையில் பேப்பர் கற்றைகளுடன் கறுகறுப்பாய் எஸ்.பி. முத்துராமன்... சொல்லிக் கொண்டே போகலாம்.

● 'பொன் விழா காணும் முதல் கலைக்கூடம் ஏவி.எம்.தான் என்று சொல்கிறார்கள்' என்று அடக்கத்துடன் பெருமைப்பட்டார் வரவேற்புரையில் சரவணன்.

"கோபுரத்தைப் பார்த்து பக்தன் கும்பிடு போட்டாலும், அந்த மரியாதை உற்சவருக்குத்தான்; கோபுரத்திலுள்ள பொம்மைகளுக்கு அல்ல! நிஜத்தை விட, நிழல் நீளமாய்த் தெரிந்தால், அதற்குக் காரணம் விளக்கின் பொஸிஷன்தான்!" என்றார் மேலும் அடக்கமாக.

● விழா மேடையில் பேசிய மற்றவர்களின் பேச்சுக்களில், சில புதிய உறவு முறைகள் தெரிந்தன. சிவகுமார் முதல்வரை 'அருமை அண்ணன்' என்றார். ராதாரவி, 'சித்தப்பா' என்றார். சிவாஜி, 'அருமைச் சகோதரர்' என்றார். ஜெமினி கமலை, 'அன்பு மகன்' என்றார். பேசிய மொத்தப் பேரிலும், 'கலைஞர் கருணாநிதி' என்று (தைரியமாய்!) குறிப்பிட்டவர்கள் : சௌகார், பானுமதி, ஜெமினி, சரோஜாதேவி ஆகியோர் மட்டுமே!

● சிவகுமார், "ஐம்பது படங்களில் நடித்து விடலாம், ஐம்பது படங்கள் தயாரித்து விடலாம். ஆனால் 50 வருடங்கள் இந்த இண்டஸ்டிரியில் தாக்குப்பிடித்திருப்பதுதான்

பெரிய சாதனை'' என்றார். சௌகார், 'மண்ணில், நட்சத்திரங்களை உருவாக்கும் தொழிற்சாலை ஏவி.எம்!' என்றார்.

● முக்தா சீனிவாசன் பேச்சில் ஆதங்கம் தெரிந்தது. தமிழ்நாட்டின் தலைசிறந்த சினிமா கம்பெனிகளாய்த் திகழ்ந்த சென்ட்ரல் ஸ்டுடியோ இன்று ஒரு கிடங்கு! மாடர்ன் தியேட்டர்ஸ், ரியல் எஸ்டேட்காரர்கள் கையில். பட்சிராஜா, கல்யாண மண்டபமாகி விட்டது. ஜெமினி முழுதுமாய் இடிக்கப்பட்டு, கமர்ஷியல் காம்ப்ளெக்ஸ் ஆகிவருகிறது. ஏவி.எம். ஐம்பது ஆண்டுகள் நிமிர்ந்து நிற்பது சாதனை என்றவர், திரைப்பட நகரத்தில் ஏவி.எம்., ஜெமினி அதிபர் வாசன், மாடர்ன் தியேட்டர்ஸ் சுந்தரம் மூவருக்கும் சிலை வைக்க முதல்வரிடம் அனுமதி கேட்டார். ஆனால், கலைஞர் தம் பேச்சில் இதை டச் பண்ணவே இல்லை)


' விசயமிகை நிகழ்ச்சி...

● வாலி, வேறு ஒரு விழாவில் தாம் கலைஞரைப் புகழ்ந்ததை, ஒரு பத்திரிகை கொச்சைப்படுத்தியது என்று ஒரு தாக்குத் தாக்கி விட்டு, கலைஞரைப் புகழ்ந்து பேசினார்.

● "சிவாஜிக்கு ஜாக்பாட், முதல் படத்திலேயே ஹீரோ. நான் சிறு வேடங்களில் நடித்து விட்டு, ஹீரோவாகும் போது வயசு முப்பத்து மூணு" என்று சொன்னவர், காதல் மன்னன். ஒரு தடவை, ஒரு கல்யாண மண்டப செட்டில், வாழைமரத்தில் இலை காய்ந்து போயிருந்ததை ஏவி. மெய்யப்ப செட்டியார் சுட்டிக்காட்டிய போது, 'இதெல்லாம் யார் சார் பார்க்கப் போறாங்க? என்று பதில் வர, "நான் பார்த்திட்டேனில்ல? வேற மரம் கட்டு'' என்று உத்தரவிட்டாராம் செட்டியார். ஜெமினி நினைவு கூர்ந்தார்.

● "நான் மண்ணில் உட்கார்ந்து கொட்டகையில் பார்த்த காலத்து கனவுக் கன்னிகள் எல்லாம் இன்று மேடையில் அமர்ந்திருக்கிறார்கள்'' என்று புளகாங்கிதப்பட்டார் பாரதிராஜா.

● 'நான் கலைஞரின் எழுத்துக்கு ரசிகன், சிவாஜியின் நடிப்புக்கு ரசிகன்' என்று ஆரம்பித்தவர் சோ. கலைஞரைப் போலவே மிமிக்ரி செய்து பேசியபோது, ஒரே ஆரவாரம். "ஒரு கலைஞர், தம் மகனை அதே துறையில் நுழைக்கலாம். ஆனால், அதிலே காலூன்றுவது மகனின் சாமர்த்தியம். நான் குறிப்பிட்டது மெய்யப்ப செட்டியார் என்ற கலைஞரை'' என்று அவர் சொன்னதும் செமை கிளாப்ஸ்!

● ஏவி.எம். செட்டியார் ஒரு தடவை ஜப்பான் சென்று திரும்பியபோது, விமானத்தில் தந்த சாக்லெட்டை சாப்பிட்டு விட்டு, அதன் அட்டைப் பெட்டியை பத்திரமாய் எடுத்துக் கொண்டு வந்தாராம். அப்போது சர்வர் சுந்தரம் படப்பிடிப்பு நடந்து கொண்டிருந்தது. படத்தின் ஹீரோயின் கே.ஆர். விஜயாவுக்கு, அந்த சாக்லேட் டப்பா அட்டையில் காணப்பட்ட பெண் அணிந்திருந்த டிசைனில் காஸ்டியூம் தைக்கச் சொன்னாராம். – நினைவுகூர்ந்தார் கே.பி.

**க**லைஞர் பேச்சு படுசுவாரசியம்: நான் முதலமைச்சராக இல்லாமல் இருந்திருந்தாலும், ஏவி.எம். தயாரித்த பராசக்தியின் வசனகர்த்தா என்ற முறையில் இவ்விழாவில் கலந்து கொள்ளும் வாய்ப்பைப் பெற்றிருப்பேன்.

● ஒருசில அரசியல்வாதிகள் தவறு செய்தால், அதையே ஒட்டுமொத்தமாய் பொதுவான ஒன்றாக்கி சினிமாவில் சித்திரிக்காதீர்கள்.

● ஒரு தடவை டீவியில் ஒரு படம் பார்த்துக் கொண்டிருந்தேன். அதன் ஹீரோவின் நடிப்பில் ரொம்ப ஈர்க்கப்பட்டு, எழுந்து டீவி. கிட்டே போய், அந்த நடிகரின் கன்னத்தில் லேசாய் ஒரு தட்டுத் தட்டி, 'நீதானடா நடிகன்' என்றேன். அந்த நடிகர் சிவாஜிதான்.

பி.கு : விழாவில் நோடபிள் ஆப்ஸென்டீஸ்: ரஜினி, அர்ஜுன், விஜயகாந்த், மீனா, காஜோல், இளையராஜா, ரஹ்மான்.

இன்னொரு பி.கு: 'மின்சாரக் கனவு' படத்தின் ஒளிப்பதிவாளர் வேணுவும் ஆப்ஸென்ட். அழைப்பு அனுப்பப்படவில்லை என்று விஷயமறிந்த வட்டாரங்களிலிருந்து தகவல். என்ன லடாய்?

தொகுப்பு : **எஸ். சந்திரமௌலி**

படங்கள் : **யோகா**

# பாண்டிச்சேரி அரசியல் வியாபாரம்!

**— நேரடி ரிப்போர்ட்**

கோடிக்கணக்கில் லஞ்ச - ஊழல்களைப் பார்த்துவிட்ட மக்களுக்கு, 'ஒரு எம்.எல்.ஏ., கட்சி தாவ ஒன்பதரை லட்சம் தரப்பட்டது' என்கிற செய்தி பெரிய ஆச்சர்யம் தராதுதான்.

நடந்தது - பாண்டிச்சேரியில். பாகூர் தொகுதி எம்.எல்.ஏ. கந்தசாமிதான் கடந்த வெள்ளிக் கிழமை (14.3.97) நாளிதழ்களின் முதல் பக்க ஹீரோ.

பாண்டிச்சேரி அரசியலின் பொதுவான குணாதிசயம் கட்சி மாறுதல். மொத்தமே முப்பது எம்.எல்.ஏ.க்கள்தான் என்பதால் ஆட்சியமைப்பவர்களின் மெஜாரிடி பலம் என்பது பெரும்பாலும் ஒன்று அல்லது இரண்டு எம்.எல்.ஏக்கள் அதிக ஆதரவு என்கிற நிலையில்தான் இருக்கும். எனவே இரண்டொரு எம்.எல்.ஏக்களைக் கட்சி மாற வைத்து விட்டாலே போதும்; ஆட்சியைச் சுலபமாகக் கவிழ்த்து விடலாம். இதன் காரணத்தால்தான் தேர்ந்தெடுக்கப்பட்ட கட்சி பாண்டிச்சேரியில் ஐந்தாண்டுகள் ஆட்சி செய்வதென்பதே ஆச்சரியமான விஷயமாக இருக்கிறது. இப்படியொரு 'கவிழ்ப்பு' முயற்சிதான் கடந்த புதன்கிழமை நள்ளிரவு நடந்திருக்கிறது.

பாண்டிச்சேரி முன்னாள் முதல்வரும் கேசரி காங்கிரஸ் கட்சித் தலைவருமான வைத்தியலிங்கமும், இன்னொரு முன்னாள் முதல்வரும் அ.தி.மு.க. தலைவருமான டி. ராமச்சந்திரனும் இந்தக் கவிழ்ப்பு முயற்சியில் ஈடுபட்டதாகக் குற்றச்சாட்டு. அன்று நள்ளிரவு 1:30க்கு டி. ராமச்சந்திரனும் அ.தி.மு.க. எம்.எல்.ஏ. நடராஜனும் பாரதி பஸ் சர்வீஸ் ஓனர் கண்ணனும் கிருமாம்பாக்கத்திலுள்ள கந்தசாமி எம்.எல்.ஏ.வின் வீட்டுக்குச் சென்று கதவைத் தட்டி கையில் ஒன்பதரை லட்சம் ரூபாய் - கட்டுக் கட்டாக கொடுத்ததாகப் பேசப்படுகிறது.

"வாழ்க்கையில் அத்தனை பணத்தை மொத்தமாக அன்றுதான் முதன் முதலில் பார்த்தேன். பயமும் அதிர்ச்சியும்தான் அப்போது எனக்கு ஏற்பட்ட உணர்ச்சிகள்!" என்கிறார் கந்தசாமி.

அரசியலில் தமது பதினைந்தாவது வயதிலிருந்தே தீவிர ஆர்வம் காட்டி வருவதாகச் சொன்ன இந்த த.மா.கா. எம்.எல்.ஏ.வுக்கு வயது 31. விவசாயக் குடும்பம். கட்டட காண்ட்ராக்ட்தான் இவரது தொழில். முதன்முறையாகத் தேர்தலில் சீட் கிடைத்து, பாகூர் ரிஸர்வ் தொகுதியில் வென்றிருக்கும் இவர், "நான் ஒரு தாழ்த்தப்பட்ட சமூகத்தைச் சேர்ந்தவன் என்பதாலேயே என்னை சுலபமாக விலைகொடுத்து வாங்கி விடலாம் என்று நினைத்து விட்டார்களே. அதுதான் வேதனையாக இருக்கிறது!" என்கிறார்.

"நான் யார் சார்? ஒரு சாதாரண எம்.எல்.ஏ. சொந்தமாக ஒரு கல் வீடு கூடக் கிடையாது. ஓலைக் குடிசைதான். என் வீட்டைத் தேடி ஒரு முன்னாள் முதல்வர் வந்து நள்ளிரவில் கதவைத் தட்டி, பத்து லட்சம் தருகிறேன்; நீ எங்களுடன் வந்து விடு. தி.மு.க. கூட்டணி ஆட்சியைக் கவிழ்த்து விடலாம். அடுத்து நம் ஆட்சிதான். உனக்கு பிற்படுத்தப்பட்டோர் நலத்துறை அமைச்சர் பதவி தந்து விடுகிறோம் என்றால் எனக்கு எப்படி இருக்கும்? இத்தனை மோசமான அரசியல் சூழ்நிலை இங்கே நிலவுவது மிகவும் வேதனை அளிக்கிறது."

"ஆனால், இது வெறும் கட்டுக்கதை; நான் கந்தசாமி வீட்டுக்குப் போகவே இல்லை; போனதாகச் சொல்வதற்கு என்ன ஆதாரம் என்று டி.ஆர். கேட்டிருக்கிறாரே?"

"ஆதாரம் ஒன்றல்ல. மூன்று இருக்கிறது. முதலாவது - டி.ஆருக்கு என் வீடு தெரியாது. கிருமாம்பாக்கத்துக்கு வந்தவர், வழி தெரியாமல் அங்குள்ள ஏழுமலையான் சைக்கிள் ஸ்டாண்டில் வேலை பார்க்கும் பையனிடம் விசாரித்துக் கொண்டுதான் வந்திருக்கிறார். அந்தப் பையன் ஒரு சாட்சி. இரண்டாவது


• அமைச்சர் கண்ணன்


• முதல்வர் ஜானகிராமன்



• சுந்தசாமி

சாட்சி, அவர் ஏறி வந்த கார். வைத்தியலிங்கத்தின் சகோதரியின் கணவரின் கார் அது. PYZ 9000 என்ற அந்தக் காரின் எண்ணைத் தெரியாத பாண்டிச்சேரிவாசிகளே இருக்க முடியாது. பாண்டியில் விவசாயத் துறை இயக்குநராக இருக்கும் அவரது அந்தக் காரில் டி.ஆர். வந்ததைப் பார்த்த சாட்சிகள் பலர் இருக்கிறார்கள்.

மூன்றாவது சாட்சி – எங்கள் கட்சியைச் சேர்ந்த ராஜசேகர உடையார் (எம்.எல்.ஏ.) என் வீட்டுக்கு வந்து பணத்தைக் கொடுத்து, நான் வாங்க மறுத்தும் வைத்துவிட்டுப் போனா்கள், நேரே உடையார் வீட்டுக்குத்தான் போயிருக்கிறார்கள். 'சுந்தசாமி ஒப்புக் கொண்டு விட்டார்; நீங்களும் சம்மதித்து விட்டால் ஆட்சியைக் கவிழ்த்து விடுவது மிகச் சுலபம்' என்று பேரம் பேசியிருக்கிறார்கள். உடையார் ஒப்புக் கொள்ளவில்லை. திருப்பியனுப்பி விட்டார். உடையார் வீட்டில் டி.ஆரையும் நடராஜன் எம்.எல்.ஏவையும் பார்த்த சாட்சிகள் பலர் இருக்கிறார்கள். டி.ஆரின் இந்த மறுப்பு மிக மேலோட்டமானது."

"நான் பணம் கொடுத்ததாகச் சொல்வது பொய்; சுந்தசாமி தானாக நாடகம் ஆடியிருக்கிறார் என்றும் டி.ஆர். பேசியிருக்கிறாரே?"

"நாடகமாட எனக்கென்ன அவசியம்? தவிர ஒன்பதரை லட்ச ரூபாய்க்கு நான் எங்கே போவேன்? நல்ல வீடு, கார் கூட என்னிடம் கிடையாது. எங்கும் நடந்தே போகிறவன் நான். அப்படி இருக்கையில், ஒன்பதரை லட்சம் என்னிடம் இருப்பதாகத் தெரிந்தால் என் தொகுதி மக்களே என்னைச் சும்மா விடமாட்டார்கள்!"

"கட்சி தாவ ஒப்புக் கொள்ளாதது மட்டுமின்றி, துணிச்சலாக அவர்கள் கொடுத்த பணத்தை சட்டசபை முன் வைத்து, விஷயத்தைப் பகிரங்கப்படுத்தியிருக்கிறீர்கள்? இரண்டு முன்னாள் முதல்வர்கள் சம்பந்தப்பட்டிருக்கும் இவ்விஷயத்தில் பின்விளைவுகள் எப்படியாக இருக்கும் என்று யோசித்தீர்களா?"

"விளைவுகளைப் பற்றி நான் கவலைப்படவில்லை. வன்முறையா? கொலை மிரட்டலா? அட, கொலையேதான் செய்வார்களா... எது பற்றியும் எனக்குக் கவலையில்லை. நான் சுத்தமானவன்! என் நேர்மை பற்றி என் தொகுதி மக்களுக்குத் தெரியும்! எம்.எல்.ஏக்களை ஆடு, மாடுகள் போல விலை பேசும் பழக்கம் இனியாவது ஒழிய வேண்டும். தவறு செய்தவர்கள் நிச்சயம் தண்டிக்கப்பட வேண்டும். மக்களுக்கு, பூசி மெழுகாத உண்மை தெரியவர வேண்டும்!"



• டி. ராமச்சந்திரன்



• வைத்தியலிங்கம்

"எனக்கு இது மிகவும் கவலையாக இருக்கிறது!" என்று ஆரம்பித்தார். அடுத்து நாம் சந்தித்த, பாண்டிச்சேரி உள்துறை அமைச்சர் கண்ணன் (த.மா.கா.)

"த.மா.கா. உருவான தினத்திலிருந்தே எங்கள் செல்வாக்கை சீர்குலைக்க... அவப்பெயர் உண்டாக்க முயற்சிகள் ஆரம்பமாகி விட்டன. பெரிய லெவலில் திட்டமிட்ட சூழ்ச்சிகள் நடந்து வருவதாக எனக்குத் தகவல் வந்தபடி இருந்தது. ஆனால் இப்படியொரு கேவலமான காரியத்தைச் செய்வார்கள் என்று நான் எதிர்பார்க்கவில்லை. பழுத்த அரசியல்வாதிகளான இரு முன்னாள் முதல்வர்கள் இதைச் செய்யக்கூடுமென்று நான் எதிர்பார்க்கவில்லை" என்றார் கண்ணன்.

"கடந்த பொதுத் தேர்தலோடு அ.தி.மு.க., காங்கிரஸ் கூட்டணி முறிந்து விட்டதே! பிறகும் அவர்கள் இணைந்து இப்படியொரு காரியம் செய்ய என்ன காரணம் என்று நினைக்கிறீர்கள்?"

"கூட்டு முறிந்து விட்டதாக ஜெயலலிதா இதுவரை பகிரங்கமாக ஒருமுறையேனும் அறிவித்திருக்கிறாரா? இல்லையே! குட்டித் தலைவர்கள்தான் வெளியே அப்படிச் சொல்லிக் கொள்கிறார்கள். வெளியே பேசப்படும் விஷயங்களுக்கும் உள்ளே மறைமுகமாக

நடக்கிற விஷயங்களுக்கும் இங்கே எக்கச்சக்க வித்தியாசம் உண்டு. த.மா.கா.வைத் தவிர பிற கட்சிகளுள் இங்கே 'Poitical Transperancy' என்பது சுத்தமாகக் கிடையாது. குறிப்பிட்ட இந்தச் சம்பவத்தைப் பொறுத்தவரை அ.தி.மு.க.வும் கேசரி காங்கிரஸும் சேர்ந்து தான் இந்த அக்கிரமத்தைச் செய்தார்கள் என்பது சத்தியம். இதற்குப் பல நிரூபணங்கள் உண்டு. காலம் அதனை நிரூபிக்கும்."

"காங்கிரஸாரும் சரி; அ.தி.மு.க.வினரும் சரி. இங்கே தன்னிச்சையாக இதுமாதிரி முடிவுகள் எடுக்க முடியும் என்று நினைக்கிறீர்களா? கட்சி மேலிட அனுமதி வேண்டாமா?"

"காங்கிரஸைப் பொறுத்தவரை கேசரியின் அனுமதியும் ஆசியும் இந்தச் சம்பவத்துக்கு உண்டா என்பது எனக்குத் தெரியவில்லை. அ.தி.மு.க.வில் ஜெயலலிதாவுக்கு இது தெரிந்திருக்கலாம்."

"சட்டசபையில் உள்ள ஆறு த.மா.கா. எம்.எல்.ஏக்களில், குறிப்பாக கந்தசாமியிடம் இந்த குதிரை வியாபாரம் பேசப்பட்டதற்கு என்ன காரணம் என்று நினைக்கிறீர்கள்?"

"சமூக, பொருளாதார ரீதியில் பலவீனமாக இருப்பவர்களைப் பணத்தால் மயக்கி விலைக்கு வாங்கி விடலாம் என்கிற எண்ணம் காலம் காலமாக அரசியலில் இருந்து வருகிற ஒன்றுதான். ஆனால் அதற்குச் சரியான சவுக்கடி கொடுத்திருக்கிறார் கந்தசாமி. எனக்குத் தெரிந்து பொதுவாழ்வில் பணத்தாசை, பதவி ஆசை காட்டி ரிஸர்வ் தொகுதி எம்.எல்.ஏக்களை மயக்கி, மனம் மாறச் செய்த சம்பவங்கள் நிறைய நடந்திருக்கின்றன. இந்தக் கயமையை முதல் முறையாக முறியடித்தவர் எங்கள் த.மா.கா. எம்.எல்.ஏ. என்பதில் பெருமிதம் கொள்கிறேன்!" என்றார்.

காரமும் கோபமும் கொப்பளிக்க நம்மிடம் பேசிய பாண்டிச்சேரி முதல்வர் ஜானகிராமன், "இந்தச் சம்பவம் எனக்கு அதிர்ச்சி ஏதும் தரவில்லை. டி. ராமச்சந்திரனுக்கு இதுமாதிரி காரியங்கள் ஏற்கெனவே பழக்கமானதுதான். 1969லேயே தி.மு.க. ஆட்சிக்கு அவர் தந்த தொந்தரவுகள் கொஞ்ச நஞ்சமல்ல. 1974, 77, 80களில் தமது குயுக்தி நடவடிக்கைகளால் தம்மைத் தாமே கவிழ்த்துக் கொண்டவர் அவர். தி.மு.க.வும் த.மா.காவும் வெறும் தோழமைக் கட்சிகளாகப் பெயரளவில் இயங்கவில்லை. இரு கட்சி உறுப்பினர்களும் உண்மையிலேயே தோழர்களாகத்தான் இருக்கிறோம். விஷயம் என்னவென்றால், கலைஞருக்கு ஏதாவது இடைஞ்சல் செய்து கொண்டே இருக்க வேண்டுமென்பது ஜெயலலிதாவின் விருப்பம். தமிழ்நாட்டில் அவரது ஆசை பலிக்காது என்பதால் பாண்டிச்சேரியில் முயற்சி செய்து பார்க்கிறார். மக்களால் ஒதுக்கப்படுகிறவர்களுக்கு வெறி ஏற்படுவது இயல்பு. இல்லாவிட்டால் ஒரு முன்னாள் முதல்வர் ஒரு சாதாரண எம்.எல்.ஏ. வீடு தேடிப் போய் லஞ்சம் கொடுக்க முன்வருவாரா?"

"முன்பு நீங்களும் டி.ஆரும் ஒன்றாக தி.மு.க.வில் இருந்தபோதே உங்கள் இருவருக்கும் 'அத்தனை ஒத்துவராது' என்று பேச்சு. அந்த அடிப்படையில் டி.ஆர். இதைச் செய்திருக்கக்கூடும் என்று மக்கள் நினைக்கலாம். ஆனால் வைத்தியலிங்கமும் இக்கூட்டில் இடம்பெறுவார் என்று நீங்கள் எதிர்பார்த்தீர்களா?"

"பன்னிரெண்டு வருடங்கள் ஆண்டவர்தானே அவர்? பதவி ஆசை, வெறி எப்படி விடும்? ஆனால் நான் பயப்படவில்லை. வழக்கு விரைவில் நடந்து முடிவு தெரிந்து, குற்றவாளிகள் தண்டிக்கப்படுவார்கள் என்று உறுதியாக நம்புகிறேன்!" என்றார்.

கந்தசாமி எம்.எல்.ஏ.வுக்கு லஞ்சம் கொடுக்க முயற்சித்ததாகக் குற்றம்சாட்டப்பட்டிருக்கும் டி. ராமச்சந்திரனைச் சந்திக்க முயன்றபோது, அவர் ஜெயலலிதாவைச் சந்திக்கச் சென்றிருக்கிறார்; எப்போது வருவார் என்று சொல்ல முடியாது என்று அவரது கட்சி அலுவலகத்தில் சொன்னார்கள்.

அவருடன் கந்தசாமி வீட்டுக்குச் சென்றதாகச் சொல்லப்படும் நடராஜன் எம்.எல்.ஏ., பாரதி பஸ் சர்வீஸின் ஓனர் கண்ணன் இவர்களும் ஊரில் இல்லை என்று தெரியவந்தது.

எம்.எல்.ஏ. ஹாஸ்டல் வளாகத்திலும் ஏனைய கட்சி அலுவலகங்களிலும், நாம் பலரிடம் பேசியதிலிருந்து இந்தக் காரியம் டி.ஆர். ஒருவரால் அரங்கேற்றப்படக்கூடியதல்ல; வைத்தியலிங்கத்தின் மூளைதான் இந்த 'ஆபரேஷனில்' முக்கிய இடம்வகித்திருக்கிறது என்பதாகப் பேசப்பட்டது.

வைத்தியலிங்கம் ஊரில்தான் இருந்தார். கட்சி அலுவலகத்தில் விசாரித்தால் வீட்டில் கேட்கச் சொன்னார்கள். வீட்டில் கேட்டபோது அவர் வெளியே சென்றிருப்பதாகச் சொன்னார்கள்.

எங்கே சென்றிருக்கிறார், எப்போது வருவார் என்று கேட்டதற்கு யாரும் பதில் தரத் தயாராயில்லை.

- **ஔரங்கசீப்**

படங்கள் : **யோகா**

காலேஜ் ஸ்டார்

# சிகரங்களைத் தொட ஆசை!

**கா**மர்ஸுக்கும் கர்நாடக சங்கீதத்திற்கும் என்ன சம்பந்தம்?

"காமர்ஸ் என்றில்லை, பொதுவாகவே கர்நாடக சங்கீதம் தெரிந்து கொள்ளும் போது பாடங்கள் படிப்பதும் சுலபமாக இருக்கின்றது" என்கிறார் விஷாகா.

"இது ஏதோ புதிய விளக்கமாக இருக்கலாம். ஆனால் இது எனது அனுபவம்."

சென்னை எத்திராஜ் மகளிர் கல்லூரியில் முதலாண்டு பி.காம். படிக்கிறார் விஷாகா. படிப்பில் சூரப்புலி. சென்ற ஆண்டு ப்ளஸ்டு தேர்வில் காமர்ஸ் பாடத்தில் ஸ்டேட் ராங்க்.

எட்டு வருடமாக கர்நாடக சங்கீதத்தை முறைப்படி கற்று, தனியாகவே மேடைக் கச்சேரிகள் செய்து வருகிறார்.

இந்த வருடம் கல்லூரி ஆல்ரவுண்டர் விருதினை விரைவில் பெற இருக்கும் இந்த மாணவியிடம் லால்குடி ஜெயராமன் என்ற பேரைச் சொன்னால் அப்படியே புல்லரித்துப் போகிறார்.

"அவருக்கு நிகராக ஓர் இசை மேதை- இசை ஆசிரியர் உலகில் கிடையாது என்று நான் அடித்துச் சொல்வேன்" என்கிறார் குரு பக்தியுடன். ஆமாம்! இப்போது விஷாகா லால்குடியிடம் வாய்ப்பாட்டு பயின்று வருகிறார்.

"சுதாராணி ரகுபதியின் நாட்டிய மாணவி நான்" என்று மெதுவாக இன்னொரு பரிமாணத்தையும் தெரிவிக்கிறார்.

"டான்ஸ் கற்றுக் கொள்ளும் போது மியூஸிக்கில் ஒரு புதிய கோணம் கிடைக்கிறது!" இதுவும் அவரது அனுபவம்.



• விஷாகா



• தோழிகளுடன்....

இசைப் போட்டிகளில் இவர் வாங்கியிருக்கும் பரிசுகள்- அது ஒரு பெரிய பட்டியல்.

சென்ற டிசம்பர் சீசனின் போது மட்டும் நாற்பது கச்சேரிகளுக்கு மேலே அமர்ந்து கேட்டிருக்கிறார். பல்வேறு சபாக்கள் நடத்திய சங்கீதப் போட்டிகளில் கலந்து கொண்டு பரிசுகளோடு திரும்பியிருக்கிறார்.

படிப்பு, பாட்டு மட்டும்தானா?

விஷாகா பேச்சிலும் புலி.

பேச்சுப் போட்டிகள், விவாதங்களில் கலந்து கொண்டு எத்திராஜ் கல்லூரிக்கு இவரது குழு வாங்கித் தந்த பரிசுகள்- மீண்டும் ஒரு பெரிய பட்டியல்.

''சமீபத்தில் ஒரு நாள் ஸ்டெல்லா மாரிஸில் நடந்த ஒரு போட்டியில், 'செக்ஸ் கல்வி தேவையா?' என்பது பற்றிப் பேசினேன். மறுநாள் வித்யாதீர்த்த ஃபௌன்டேஷன் ஏற்பாடு செய்திருந்த ஒரு போட்டியில் 'சத்சங்கம்' பற்றிப் பேசினேன்! இரண்டு நாள் தலைப்பையும் எண்ணிப் பார்த்து எனக்கு நானே சிரித்துக் கொண்டேன்!'' என்று வெளிப்படையாகப் பேசும் விஷாகாவுக்கு ஆங்கிலத்தில் கவிதை எழுத வருகிறது. பெயிண்டிங் பண்ணுகிறார்.

காலையில் எழுந்ததும் யோகா. ஸ்லோகம், ஜெபம், ராமாயண பாராயணம். பிறகு கல்லூரி. மாலை லால்குடியிடம் சங்கீதம். இரவு பாடங்கள். மறுநாள் ஏதேனும் போட்டிகள் இருந்தால் குறிப்பெடுத்தல். 'டைம் மானேஜ்மெண்ட்' பற்றி விஷாகா புத்தகம் எழுதலாம்.

சினிமாவுக்குப் போவதில்லை' இவர். இருந்தாலும் கமல், ஊர்வசி பிடிக்கும். டேட்டிங், பாய் ஃபிரண்ட், இத்யாதிகள் பற்றி விஷாகாவின் சிம்பிள் கருத்து. ''வேஸ்ட் ஆஃப் டைம்.''

"எனக்கு இசையில் சிகரங்களைத் தொட ஆசை. இசையை முழு நேரமாக எடுத்துக் கொள்ளப் போகிறேன். ஒரு வேளை என் இசை ரசிகர்களுக்குப் பிடிக்காமல் போனால், பிழைப்பதற்காகத்தான் இப்போது பி.காம் படிக்கிறேன். சி.ஏ. ஃபவுண்டேஷனும் செய்கிறேன்."

எத்திராஜ் கல்லூரியின் இன்றைய ஸ்டார் விஷாகா என்றால் பின்னணியில் இருப்பவர்கள்: "மாதா, பிதா, குரு லால்குடி, பிரின்ஸிபல் இந்திராணி, காமர்ஸ் துறை தலைவர் ஜோதி. அனைத்துக்கும் மேலாக விஷாகாவின் உழைப்பு!

**- ராணி மைந்தன்**

வண்ணப்படங்கள்: **யோகா**

# கௌடா ஜிப்பா ஸ்டிரிப் டீஸ்!

"என்ன குழந்தைசாமி, ஸ்டிரிப் டீஸ்னு ஒரு சினிமா வந்திருக்கு, கவனிச்சியா?" என்று கேட்டேன்.

"அப்படின்னா என்ன?" என்று குழந்தை சாமி குழந்தைத்தனமாகக் கேட்டார்.

"நிஜமாகவே தெரியாதா? அப்பாவிப்பா நீ!.. அது வந்து ஆண்பிள்ளைங்களை குஷிப் படுத்த பெண்கள் ஆடற ஒரு வகை நடனம்!"

"அப்படியா! சொல்லு, சொல்லு!" என்று விவரங்களுக்கு ஏங்கினார் குழந்தைசாமி.

"இப்பல்லாம் அமெரிக்கா ரொம்ப முன் னேறிடுச்சு! பெண்களைக் குஷிப்படுத்த ஆண் கள் கூட ஸ்டிரிப் டீஸ் நடனம் ஆடறாங்க!"

"அதான் எப்படின்னு கேட்கறேன்" என்றார் குழந்தைசாமி. குழந்தைத்தனம் இப்ப காணோம்!

"உதாரணமா நம்ம தேவேகௌடாவே ஸ்டிரிப் டீஸ் பண்ணறார்னு வைச்சுக்க. சும்மா ஒரு இதுக்குத்தான்... மேடைல ஒரே இருட்டு. எதிரே சிதம்பரம், கருணாநிதி, மூப் பனார், கேசரி, குப்தா எல்லாரும் பெண்கள் உடையில்..."

"ஐயய்ய..."

"சும்மா ஒரு இதுக்குத்தான். பெண் களா அவங்களை உருவகப்படுத் திக்கறேன்... மேடைல சடார்னு ஸ்பாட் லைட்! 'ஜிங்கு ஜிங்கு'ன்னு வாத்திய முழக்கம். ஸ்பாட் லைட் சுழன்று பளீர்னு கௌ டாவைக் கவ்விக்குது. ஒரே கைதட்டல்! வரவேற்பு விசில்!"

"அப்புறம்?"

"குறுக்க குறுக்க பேசாதே.. மூட் அவுட் ஆயிடுவேன்... கௌடா, பஞ்சகச்சமாக வேஷ்டி, ஜிப்பா அணிந்து, மேடையில் முன் னும் பின்னும் ஒய்யாரமாக நடந்து, சுற்றி வரு கிறார். தில்லி குளிருக்கு சால்வை போர்த்தி யிருக்கிறார். மைக்கைப் பிடிச்சுக்கிட்டு பாடறார்:

**'ஆண்டவன் அருளாலே**
**ஆட்சியிலே நானிருக்கேன்...'**

'உய் உய்'னு விசில் சத்தம் காதைக் கிழிக் கிறது. கௌடா சால்வையை நீக்கி சுழற்றி சுழற்றி வீசறார். அது கேசரி தலை மேல வந்து விழறது. கேசரிக்கு ஒரே உற்சாகம். 'நிலை யான ஆட்சி! நிலையான ஆட்சி'ன்னு கத்தறார்.

**'சீருடன் நிலைக்கும் என் ஆட்சி**
**சீதாராம் தயவாலே...'** என்று பாடுகிறார் கௌடா. 'ஜிங் ஜிங்'கென்று வாத்தியங்கள் முழங்க, தாளத்துக்கு ஏற்ப ஒய்யார நடை நடந்து, ஜிப்பா பித்தான்களைக் கழற்றுகிறார்! தலைக்கு மேல் ஜிப்பாவை உருவுகிறார்! உள்ளே கட் பனியன்!



பார்வையாளர்கள் மஜா வில் இருக்காங்க. "வலது சாரி வலது சாரி!" என்று கத்தும் சிதம்பரத் தின் முகத்தைக் குறிபார்த்து கௌடா சுருட்டி எரியும் ஜிப்பா வந்து விழுகிறது!

"தர்ர்ர்ரம் தம் தம்" என்று டிரம்ஸ் முழங்க, கௌடா கட் பனியன், பஞ்சகச்சத் துடன், ராமருக்கு முன்பாக சூர்ப்பனகை போல அன்ன நடை பயில்கிறார். இடையை அசைத்தபடியே பாடுகிறார்:

**'வலது சாரி திருப்திக்கு**
**ஒப்பன் டோர் பாலிஸி**
**பணக்காரர் மகிழ்ச்சிக்கு**
**வரிக்குறைப்பு வீகஸி'**

டிரம்ஸ் பீட்டின் வேகம் அதிகரிக்கிறது.

கௌடா பஞ்சகச்சத்தின் ஐந்து கச்சங்களையும் ஒவ்வொன்றாக அவிழ்க்கிறார். வேஷ்டி நழுவி தரையில் விழ, பார்வையாளர் மத்தியில் ஒரே குஷால்! கௌடா சுருட்டி எரிகிற வேஷ்டியை குப்தா காட்ச் பிடித்துக் கொள்கிறார்.

கட் பனியன் டிரௌஸருடன், ரம்பையும் ஊர்வசியும் தோற்றுப் போகும்படி அழகு நடை பயின்று மேடையில் வளையவருகிறார் கௌடா. "இடது சாரி! இடது சாரி!" என்று குரல் கொடுக்கிறார் குப்தா.

**'இடது சாரி இன்புறவே**
**மான்யங்கள் உண்டு,**
**ஏழைகள் வாழ்த்திடவே**
**பாதி விலை உணவு!'**

பாடியவாறே குலுக்கி மினுக்கி கண்ணடிக்கிறார் கௌடா. பார்வையாளர்கள் உட்கார முடியாமல் துள்ளுகிறார்கள்.

கௌடா அடுத்து பனியனில் கை வைக்க, கருணாநிதி தம்மை மறந்து மேடை நோக்கி ஓட, மற்றவர்கள் கட்டுப்படுத்துகிறார்கள். "தி.மு.க. ஆதரவு! தி.மு.க. ஆதரவு!" என்று கூச்சலிடுகிறார் கருணாநிதி. அவரை நோக்கி கௌடா பனியனைக் கழற்றி வீசி விட்டு, இடக்கரத்தில் மைக் பிடித்துப் பாடுகிறார்:



**'மாநிலத்தில் தன்னாட்சி**
**மத்தியிலும் கூட்டாட்சி**
**மங்கலமான தி.மு.க.**
**மகிழ்ந்தேத்தும் மாட்சி!'**

மொழு மொழுவென்ற உடல்வாகுடன் கௌடா டிரௌசர் அணிந்து, கடிகாரப் பெண்டுலமாய் மேடையைச் சுற்றி வர, யாருக்குமே இருப்புக் கொள்ளவில்லை. வாத்திய முழக்கம் உச்சகட்டத்தை நெருங்குகிறது. முறுக்கேற்றப்பட்டவராக மூப்பனார் நாற்காலி மீது ஏறி நின்று, "த.மா.கா., த.மா.கா.," என்று டிரம்ஸ் பீட்டுக்கு ஏற்ப முழக்குகிறார். தாள கதிக்கு ஏற்ப கைதட்டவும் செய்கிறார். கௌடா பாடுகிறார்:

**'த.மா.கா. தயவாலே**
**தேதியும் ஓடுது விரைவாவே;**
**மூப்பனார் அபயம் தரவே**
**மூப்படையுமோ முன்னணியே!'**

**செம்பியன்**

"நேக்கு! நேக்கு!" என்று அலறுகிறார் சந்திரபாபு நாயுடு. அவர் மீது பரிதாபப்பட்டு, மோகனப் புன்னகை காட்டி, டிரௌசர் நாடா முடிச்சை அவிழ்க்கிறார் கௌடா. இமைக்கும் நேரத்தில் அது லாகவமாகக் கழற்றப்பட்டு சந்திரபாபு நாயுடு நோக்கிப் பறக்க, ஜட்டியுடனும் விஷமப் புன்முறுவலுடனும் மேடையை வளைய வருகிறார் கௌடா.

**'சுய நல மிகு ஜட்டி**
**பதவி ஆசை கெட்டி**
**டிரம்ஸ் நிறைய கொட்டி**
**கேட்டாலும் தரேன் பெட்டி'**

என்று பாடியபடியே ஜட்டி விளிம்பில் விரல் வைக்கிறார் கௌடா. டிரம்ஸ் உச்ச கட்டத்தில் உறுமுகிறது. 'படக்'கென்று ஸ்பாட்லைட் அணைகிறது."

**வ**ர்ணனையை நான் முடிக்கவும் பக்கத்து வீட்டு குழந்தைசாமி, "ஹூம் உன்னைப் போய்க் கேட்டேனே! ஸ்டிரிப் டீஸ் சினிமா பார்க்கணும்கிற ஆசையையே கொன்னுப் புட்டே!" என்று அலுத்துக் கொண்டு எழுந்து போனார்.


லேடீஸ் ஸ்பெஷல்
LADIES SPECIAL
LADIES SPECIAL
நமக்கு இந்த பஸ்ல வேலை இல்லை


அஞ்சாவது சம்பள கமிஷன் அறிக்கை வந்திடுச்சி! என் சம்பளத்துல நூறு ரூபா கூட்டித் தாங்கம்மா


உங்களுக்கு என்னைப் பிடிக்குமா? என் சம்பளத்தைப் பிடிக்குமா?
சம்பளம் வர ஒரே ஒரு நாள் அந்த சம்பளம். மற்ற எல்லா நாளும் உன்னைத் தான் பிடிக்கும்!


வேலைக்குப் போற மனைவி யாச்சே! வீட்ல வேலைகளைப் பகிர்ந்துப்பீங்களா?
"ம். அவ சமைச்சா, நான் சாப்பிடுவேன், அவ துணி துவைச்சு போட்டா, நான் போட்டுக்குவேன். இப்படி நிறைய!










கருத்து: ஜோலி
படம்: செல்லம்





தமிழக காங்கிரஸின் தலைவராகத் தங்கபாலு நியமிக்கப்பட்டிருப்பது ஒரு தாற்காலிக ஏற்பாடாகத்தான். அவர் தன்னிச்சையாகச் செயல்படக்கூடாது என்றுதான் அவருக்கு ஆலோசனை வழங்க ஒரு கமிட்டியையும் நியமித்திருக்கிறது டெல்லி மேலிடம். ஆனாலும் தங்கபாலு டணால் டணாலென்றுதான் செயல்படுகிறார். இது எதில் போய் முடியும்? ஓர் அலசல்...

பதவியைப் பெற்று விட்டார். இதில் போட்டியிட்டு கோட்டை விட்டவர்கள் திண்டிவனம் ராமமூர்த்தி, வாழப்பாடி ராமமூர்த்தி, அன்பரசு ஆகியோர். ஆக இணைய மறுக்கின்றன கோஷ்டிகள். இனிமேல்தான் தங்கபாலுவுக்கு தலை(வர்)வலி!

தலைவரானவுடன், "குடும்பத்தில் பெரிய அண்ணன் போன்றவர் மூப்பனார். த.மா.கா. உட்பட பிரிந்து போன காங்கிரஸ்காரர்களை, மீண்டும் காங்கிரஸில் சேர்க்கப் பாடுபடுவேன்" என்று டணாலென்று தங்கபாலு சொன்னது வாழப்பாடி கோஷ்டிக்கு சூட்டை உண்டாக்கி விட்டது. "இவருக்கு என்ன உரிமை இருக்கு? இதைப் பற்றிப் பேச, கட்சித் தேர்தலை மே மாத இறுதிக்குள் நடத்த வேண்டும். அதுவரையில் - தேர்தலை நடத்தி முடிக்க, இவர் தலைமையில் 21 பேர் கொண்ட அட்ஹாக் கமிட்டி போடப்பட்டிருக்கிறது அவ்வளவுதான். ஏதோ நிரந்தரத் தலைவர் போல, இவர் செயல்படுவது வியப்பைத் தருகிறது. பத்திரிகைகளில் இவர் சொல்வதைப் போல அனைத்துத் தரப்பினரையும் அணைத்துக் கொண்டு போவாரா என்பதை இனி செயல்படும் போதுதான் பார்க்க வேண்டும்!" என்கிறார், வாழப்பாடியாரின் நெருங்கிய சகாவான கிள்ளிவளவன். த.மா.காவை மீண்டும் காங்கிரஸில் சேர்க்கக் கூடாது என்பது வாழப்பாடியார் தரப்பு வாதம்.

ஆனால், காங்கிரஸிலிருந்து தனியே பிரிந்து சென்ற வாழப்பாடி கோஷ்டியே மீண்டும் சேர்ந்து கொண்டுவிட்ட நிலையில், த.மா.காவினர் சேருவதில் என்ன தவறு என்பது எதிர்த் தரப்பினர் வாதம்!

"மே மாதம் 31-க்குள் கட்சித் தேர்தலை நடத்தி முடிக்க வேண்டும்; இல்லையேல் போராட்டம் நடத்துவேன். மாவட்டக் கமிட்டிகளைக் கலைக்க மாநிலத் தலைவருக்கு அதிகாரம் கிடையாது" என்று அறிக்கை விட்டு கோதாவில் குதித்திருக்கிறார் குமரியார்.

# 'டணால்'

**கை** தூக்கி விடுபவர்கள் யார் என்பதைப் புரிந்து கொண்டு அவர்களை அனுசரித்துப் போவதில் தங்கபாலு கெட்டிக்காரர். புதுக்கோட்டைத் தேர்தலில் காங்கிரஸ் வாங்கிய வாக்குகளைப் பார்த்து வெறுத்துப் போன மிச்ச சொச்ச காங்கிரஸார், தலைவர் பதவியிலிருந்து குமரி அனந்தனை மாற்ற வேண்டும் என்று கொடி பிடித்த போது, கிட்டத்தட்ட தமக்கு குருவாக செயல்பட்டுக் கொண்டிருக்கும் குலாம்நபி ஆசாத் மூலம் தலைமைப்

**இ**ப்படி உட்கட்சி விவகாரம் ஒருபக்கம் இருக்க, 'அ.தி.மு.க.வுடன் கூட்டணியைப் புதுப்பித்துக் கொள்ள காங்கிரஸ் விரும்புகிறது. அதனால்தான் தங்கபாலுவைத் தலைவராகப் போட்டிருக்கிறார்கள்' என்றும் பேச்சு அடிபடுகிறது. "அப்படியொரு எண்ணம் மேலிடத்துக்கு இருந்தால் அதற்கு சரியான நபர் வாழப்பாடிதான்!" என்று சொல்கிறார் தங்கபாலுவுக்கு நெருங்கிய காங்கிரஸ் பிரமுகர் ஒருவர்.

"இப்போது தேர்தல் எதுவும் இல்லை. ஆனால் காங்கிரஸ் நினைத்தால் எந்த நேரத்திலும் தேர்தலைச் சந்திக்கும் நிலை வரலாம். த.மா.காவை அணைத்துக் கொண்டு போகும்படி மேலிடத் தலைவர்கள் சிக்னல் கொடுத்திருப்பது உண்மைதான். தேசிய அரசியலால் ஏற்பட்டிருக்கும் நிலை இது. தவிர, வரும் தேர்தலில் வலிமையான ஒரு துணையோடு காங்கிரஸ் போட்டியிடாவிட்டால், தமிழ்நாட்டில் காங்கிரஸ் காணாமல் போய்விடும். ஜெயலலிதா ஊழல் பேர்வழி என்று இவ்வளவு பிரசாரம் செய்தும் புதுக்கோட்டையில் அ.தி.மு.க.வுக்கு அதிக வோட்டு விழுந்திருக்கிறது. ஊழல் அரசியல்வாதிகளை ஓரம்கட்ட வேண்டும் என்ற கருத்து சரிதான். ஆனால் அந்தக் கட்சிக்கு வோட்டு விழும் என்கிற போது, நாங்கள்

அதோடு தொகுதி உடன்பாடு வைத்துக் கொள்ள நினைப்பது தவறாகாது. காரணம் தேர்தலில், யார் எவ்வளவு இடத்தில் வெற்றி பெறுகிறார்கள் என்பதைப் பொறுத்தே கட்சியின் பலம் தீர்மானிக்கப்படுகிறது. த.மா.கா.,



# தங்கபாலு!

தி.மு.க.வுடன் இருக்கும்வரை நாங்கள் தி.மு.க.வுடன் சேர முடியாது. திடீர் தேர்தல் வந்தால், அதிகபட்சமாக, த.மா.கா. மற்றும் தி.மு.க. வோடு தொகுதி உடன்பாடு வைத்துக் கொள்ள முயலலாம். இந்த நிலையில் ம.தி.மு.க. - அ.தி.மு.க. வோடு சேர்ந்து கொண்டு வலிமையான எதிர் அணியாக மாற வாய்ப்பு உண்டு" என்று அலசினார் அந்தப் பிரமுகர்.

"கேசரியைப் பொறுத்தவரை, தேவேகௌடாவை கவிழ்த்து விட்டு, தாங்கள் ஆட்சி செய்யும் சந்தர்ப்பம் உருவாகும் போது, மூப்பனார், கலைஞர் ஆகியோரது தயவு தேவைப்படும் என்பதை உணர்ந்து செயல்படுவது தெரிகிறது. ஆனால் அந்த நிலை உருவாவதற்கு முன்னர், ஷரத்பவாருடன் கேசரி ஒரு சமரசத்துக்கு வரவேண்டும். இந்த நிலை ஏற்படாதவரை, தேவேகௌடாவுக்குக் கவலை இல்லை. அப்படியில்லையேல், ஏதோ ஒரு குழப்பத்தில், காங்கிரஸ் ஆதரவு வாபஸ் பெறப்பட்டு தேர்தல்தான் கதி என்ற நிலை வரும் போது, மாநிலங்களில் அதிக எம்.பிக்களைப் பெற கேசரிக்கு வலிமையான துணை வேண்டும். ஆக எப்படிப் பார்த்தாலும், தோளில் சுமந்து செல்ல யாராவது வேண்டும். அந்தச் சமயத்தில் மேலிடம் சொல்வதைத் தட்டிக் கழிக்காத தங்கபாலு போன்ற தலையாட்டிகள் தலைவராக இருப்பதே நல்லது என்று கருதியிருக்கலாம்!" இப்படியும் ஒரு விளக்கம் சொல்லப்படுகிறது.

"எங்களைப் பொறுத்தவரையில் கூட்டணி தொடர்கிறது. தேர்தல் வரும் பட்சத்தில் அ.தி.மு.க.வோடு காங்கிரஸ் சேரத் தயங்கினால், குறைந்தபட்சம் எங்களோடு தொகுதி உடன்பாடாவது வைத்துக் கொள்வது அவர்களுக்கு நல்லது. இன்னமும், ஒரு தேர்தல் வரையாவது த.மா.காவோடு எங்கள் கூட்டணி தொடரும் என்று நம்புகிறோம். தி.மு.க. - த.மா.கா - காங்கிரஸ் கூட்டணி ஏற்பட்டால், ம.தி.மு.க. வேறு வழியில்லாமல் அ.தி.மு.க.வுடன் சேர வேண்டிய நிலை வரும். அந்தச் சூழ்நிலையில், ம.தி.மு.க.வில் பெரும் பிளவு வரும்" என்கிறார் தி.மு.க. பிரமுகர் ஒருவர்!

இதற்கிடையில் போட்டி அ.தி.மு.க. - 'அ.தி.மு.க.வுடன் சேர மாட்டோம்' என்று அறிவித்திருக்கிறது. இதைப் பற்றிக் கேட்டபோது அ.தி.மு.க. தலைவர் ஒருவர் புன்னகைத்து விட்டு, "சுயநலம் காரணமாக எல்லோரும் மீண்டும் ஒன்றுசேருவோம். இது தேர்தல் வரும் போது உங்களுக்கு பளிச்செனப் புரியும்!" என்றார். "காங்கிரஸ் உங்களோடு சேர விரும்பினால் சேர்த்துக் கொள்வீர்களா?" என்றபோது, "அரசியலில் யாரும் தீண்டத்தகாதவர்கள் கிடையாது. தமிழ்நாட்டில் காங்கிரஸ் என்பது த.மா.காதான். தனது கோட்டையான புதுக்கோட்டையிலேயே காங்கிரஸ் கட்சி அதிக வாக்குகள் பெறவில்லையே! ஆனாலும் சில நேரங்களில் தவிர்க்க முடியாமல் நாங்கள் லக்கேஜைத் தூக்க

## சுட்ட பழம்:

சிகரெட் தயாரிக்கும் ஐ.டி.சி. நிறுவனம் 15-20 வயதுக்குட்பட்ட ஆயிரம் மாணவர்களுக்கு தரமணி திரைப்பட நகரத்தில் 'பார்ட்டி' நடத்தி, இலவசமாக 'பீர்', 'சிகரெட்' வழங்கியது. அந்த பார்ட்டியில் எடுக்கப்பட்ட குதூகலப் புகைப்படங்கள் புதிய பிராண்ட் சிகரெட் விளம்பரங்களில் பயன்படுத்தப்படும்.

– செய்தி

**கனிந்த சிந்தனை:**

'இது அநியாயம்! அக்கிரமம்!' என்று ஜெயந்தி நடராஜன் முதலான எம்.பிக்கள் கொதித்துக் குதித்து பாராளு மன்றத்தில் ரகளை செய்திருக்கிறார்கள்.

ஐ.டி.சி. செய்துள்ள சேவை எத்தனை மகத்தானது என்பது இந்த அசட்டு எம்.பிக்களுக்குத் தெரிந்தால்தானே. வெயிலால் உடலும் பரீட்சை டென்ஷனால் மனமும் காய்ந்து போய்க் கிடக்கும் மாணவர்களுக்கு இப்படி நூதன முறையில் உற்சாகமூட்ட ஒரு ஆத்மாவுக்காவது தோன்றியதா?!

'ஐயோ! இளைஞர்களின் உடல் மனநலம் பற்றி யோசிக்காமல் இப்படியா அவர்களின் எதிர்காலத்தை இருட்டாக்குவது!' – இது சில பழைய பஞ்சாங்கங்கள் படும் அற்பக் கவலை!

மாணவர்களின் எதிர்காலமா நாட்டுக்கு முக்கியம்! பணவளம் கொழிக்கிற மல்டி நேஷனல் நிறுவனங்களின் லாபம் அல்லவா முக்கியம். அவை லாபத்தில் கொஞ்சம் போல செலவழித்து கலை நிகழ்ச்சிகளை ஸ்பான்ஸர் செய்தால் போச்சு. அந்த நிகழ்ச்சிகளுக்கு மாணவர்கள் வந்து மனவளம் பெற்றுக் கொள்ளட்டுமே!

'ஐ.டி.சி. நிறுவன அதிகாரிகள் வீட்டிலும் வயசுப் பிள்ளைகள் உண்டு-மறந்துவிடக் கூடாது!'– சில சீரியல் டைப் ஆசாமிகள் சீறுகிறார்கள்.

அந்தப் பிள்ளைகளை மனதில் கொண்டுதான் இப்படியொரு காரியம் நடந்திருக்கிறது என்பதை அழுத்தந் திருத்தமாய்ச் சொல்கிறோம்: புதிய 'பிராண்ட்' சிகரெட் அமோகமாய் விற்றால் ஐ.டி.சி. பயனடைய, அதில் வேலை பார்க்கும் பெற்றோரும் பயனடைய, இறுதிப் பயன் அவர்கள் பிள்ளைகளுக்கும் எட்டாமலா போய் விடும்!

– சில்மிஷா

வேண்டிய நிலையும் வரலாம்!" என்றார் அவர்.

தமிழ்நாடு காங்கிரஸுக்குத் தலைவரை நியமித்தது தொடர்பான விஷயங்கள் த.மா.காவினருக்கு எந்தவித ஆர்வத்தையும் உண்டாக்கவில்லை. "தமிழ்நாட்டைப் பொறுத்தவரை காங்கிரஸ் என்பது தமிழ் மாநிலக் காங்கிரஸ்தான். தேசிய நோக்கம் கொண்ட மாநிலக் கட்சி எங்களுடையது. நன்றாக வளர்ந்து கொண்டிருக்கிறோம். இந்த நிலையில் காங்கிரஸோடு மீண்டும் இணைவது என்ற பேச்சுக்கே இடமில்லை. இதை நான் சொல்லவில்லை. எங்கள் தலைவர் மூப்பனாரே சொல்லியிருக்கிறார். எங்கள் தனித்தன்மையை காப்பாற்றிக் கொள்வோம்" என்கிறார், த.மா.கா. சட்டமன்ற உறுப்பினர் அழகிரி. "அதே சமயம் த.மா.காவில் யாராவது சேர விரும்பினால் வந்து சேரலாம்" என்றும் சொல்கிறார் அழகிரி!

தங்கபாலு என்ன சொல்கிறார்? "என்னைப் பொறுத்தவரை துவக்கத்திலிருந்தே நான் காங்கிரஸ் காரன். எந்தவித மனக்கிலேசத்துக்கும் இடம் கொடுக்காமல், கட்சியில் தொடர்ந்து இருக்கிறேன். மேலிடம் என்ன சொல்கிறதோ அதை ஏற்றுச் செயல்படுகிறவன். தக்க சமயத்தில் என் கருத்துக்களைச் சொல்வேன். தேர்தல் நடத்துவதற்காக என்னைத் தலைவராகப் போட்டிருக்கிறார்கள் என்று சிலர் சொல்கிறார்கள். அதுதான் காரணம் என்றால் தலைவர் பதவி என்ன தேர்தல் அதிகாரி பதவியா? தேர்தலை நடத்துவதும் என் பணியில் ஒன்று; அவ்வளவுதான். மற்றபடி காங்கிரஸ் மேலிடம், என்ன கட்டளையிடுகிறதோ அதற்கேற்றபடி செயல்படுவேன். பிரிந்து போன காங்கிரஸார் கட்சியில் வந்து இணைய வேண்டும் என்று மேலிடம் தீர்மானித்திருக்கிறது. அந்த அடிப்படையில்தான் த.மா.காவை காங்கிரஸில் சேர்க்க முயற்சி செய்வேன் என்று கூறினேன். அன்றாடப் பிரச்னைகளிலிருந்து எல்லாப் பிரச்னைகளைப் பற்றியும் பேச எனக்கு உரிமை உண்டு. அதே போல மாநிலத் தலைவரை மாற்றி அட்ஹாக் கமிட்டியை போட்டதன் காரணமாக, மாவட்டக் கமிட்டிகள் கலைக்கப்பட்டிருக்கின்றன. இதுவும் மேலிட முடிவுதான். எல்லோர் ஆலோசனையையும் கேட்டுச் செயல்பட ஆர்வமாக உள்ளேன். எனக்கு சர்ச்சைகள் தேவையல்ல" என்று நம்மிடம் சொன்னார் தங்கபாலு.

தங்கபாலு இப்படிச் சொன்னாலும் மிகுந்த எதிர்ப்புகளுக்கிடையில்தான் அவர் செயல்பட வேண்டியிருக்கும் என்பது வெளிப்படை! அரசியல் கிண்டல்காரர்கள் சொல்கிற மாதிரி, தொண்டர்களே இல்லாத கட்சிக்குத் தலைவராக இருந்து என்ன சாதித்துவிடப் போகிறார் அவர்! அடுத்த தேர்தலில் தான் தெரியும்!

– ஆரெஸ்வி

அதோ பாத்தீங்களா,
அதான் டிபன் பாக்ஸ் குண்டு...

இது சைக்கிள் மணி குண்டு,
டம்ளர் குண்டு.

இது கடிகாரக் குண்டு.



1997 மார்ச் 23
தாது பங்குனி 10
மலர் : 55
இதழ் : 34

# கல்கி



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.

## வெடிக்காத குண்டுகள் விடுக்கும் எச்சரிக்கை!

சென்னை நகர எல்லையில் தமிழக போலீஸ் ஒரு பயங்கரத்தைக் கண்டறிந்திருக்கிறது. சைக்கிள் மணி, மோட்டார் ஹார்ன், டிஃபன் காரியர், பிளாஸ்டிக் தம்ளர் என்று ஏதோ வீதியோர கடைப்பரத்தலை விவரிப்பது போல் பட்டியல் போடப்படுகிறது!

- அவ்வளவும் குண்டுகள்! அடுக்கு மாடிக் கட்டடங்களைக் கூட தகர்த்துத் தரைமட்ட மாக்கும் சக்தி படைத்தவை எனத் தெரியவரும்போது, அதிர்ச்சியுடன் ஆதங்கமும் சேர்ந்து கொள்கிறது.

தமிழக போலீஸ் சுறுசுறுப்பாக இயங்கி இந்த பயங்கரத்தை வெளிக்கொணர்ந்தது. இது தொடர்பாக இரு இளைஞர்களைக் கைதும் செய்திருக்கிறது!

சுறுசுறுப்பைப் பாராட்டத்தான் வேண்டும். ஆனால், கைப்பற்றப்பட்ட பொருட்களுடன் போட்டோவுக்குப் 'போஸ்' கொடுத்த காவல்துறை அதிகாரிகளும் முதல்வரும் பெருமைப்பட முடியாது.

காரணம், இப்படியொரு சதி நடப்பதைக் கண்டுபிடித்துச் சொன்னது மத்திய அரசின் **Intelligence Bureau**தான். அந்தத் தகவல் மட்டும் உரிய நேரத்தில் வந்து சேர்ந்திராவிட்டால், நாளிதழ்களில் வேறுவிதமான செய்தியும் புகைப்படங்களும் பிரசுரமாகியிருக்கும்!

காவல் துறையின் இதர பிரிவுகளை விட, சி.ஐ.டி. பிரிவுதான் சிறப்பாகவும் பொறுப்புடனும்




விழிப்புடனும் இயங்க வேண்டும் - இதை நாம் பலமுறை வலியுறுத்தியிருக்கிறோம்.

ஆனால் தமிழகத்தில் இப்படிப்பட்ட சதி உருவாகி வருவது அப்பிரிவுக்குத் தெரியாமலே இருந்திருக்கிறது. - இது கவலைக்கு மட்டுமின்றி கண்டனத்துக்கும் உரிய விஷயம்.

விடுதலைப் புலிகள் நடமாட்டம் ஒருபுறமிருக்க, இந்த அதிர்ச்சி கண்டுபிடிப்புக்குப் பின் இருப்பவர்கள் பாகிஸ்தானிய ஐ.எஸ்.ஐ. உளவாளிகள் என்பது தமிழகத்துக்குப் புதியதொரு தலைவலி.

சில வாரங்களுக்கு முன் பி.ஜே.பி. தலைவர்கள் தமிழகத்தில் ஐ.எஸ்.ஐ. ஊடுருவல் இருப்பதாக எச்சரித்திருந்தார்கள்.

தமிழக அரசும் காவல் துறையும் அந்த எச்சரிக்கையை அரசியல் வாசகமாகப் புறக்கணித்தது தவறு என்பது இப்போது நிரூபணமாகியிருக்கிறது. அச் சந்தர்ப்பத்தில் இவ்விரு தரப்பினரும் எந்தவிதமான பதிலையும் அளிக்கவில்லை.

'மதத் தீவிரவாதிகளின் மூட வெறி அப்பாவி மக்களை பலிகொள்ளலாமா?' என்று முதல்வர் கவலையுடன் கேள்வி எழுப்புகிறார்.

அப்பாவி மக்களை பலி கொள்வதன் மூலம் மதத்தின் பெயரால் கலவரங்களைத் தூண்டுவதுதான் இந்தத் தீவிரவாதிகளின் நோக்கமே என்பது மிகவும் தெளிவாகத் தெரிகிறது.

பம்பாய் கலவரங்களைப் போல் சென்னையிலும் தூண்டிவிடும் எண்ணத்துடன்தான் சதி திட்டப்பட்டிருக்கிறது.

இந்த சந்தர்ப்பத்தில், கர்நாடக மாநிலம், வடக்கு கன்னடப் பகுதியிலிருக்கும் பட்கல் என்ற இடத்தில் நடந்த ஹிந்து-முஸ்லிம் கலவரங்கள் குறித்து ஆராய்ந்த ஜகந்நாத ஷெட்டி விசாரணைக் கமிஷனின் அறிக்கையும் வெளிவந்திருக்கிறது. 1993இல் நடந்த அக் கலவரங்




களுக்கு ஐ.எஸ்.ஐ.தான் காரணம் என்பது கமிஷனின் தேர்ந்த முடிவு.

ஐ.எஸ்.ஐ.யின் வலைப் பின்னல், நாட்டின் மூலை முடுக்குகளிலெல்லாம் ஊடுருவியிருப்பது உறுதியாகியிருக்கிறது. பெருநகரங்களை மட்டுமின்றி சிறிய ஊர்களையும் சுற்றுவட்டாரங் களையும் குறிவைத்து அவர்கள் இயங்கி வருகிறார்கள்.

நாட்டில் அரசியல்வாதிகளும் மதத் தலைவர்களும் விழிப்படைந்து, மக்களை உணர்ச்சிப் பெருக்கிலிருந்து பாதுகாக்க வேண்டும். கலவர அச்சுறுத்தல் நிலவுகிற தருணத்தில் மத உணர்ச்சிகளைத் தூண்டக்கூடிய ஹிந்துத்வா பாணி கோஷங்கள் மேலும் பாதிப்பையே ஏற்படுத்தும். அவற்றை அரசியல்வாதிகள் உடனடியாக மூட்டை கட்டி வைப்பது நல்லது. மதத் தலைவர்கள், பொது இடங்களில் சர்வ மதக் கூட்டங்கள் நடத்தி, தங்களது சமநோக்குப் பார்வையையும் சகிப்புத் தன்மையையும் உணர்த்துவதுடன் மக்களிடையே அவற்றை விதைக்கவும் வேண்டும்.

இவை அத்தனையும் செய்வது கலவரங்கள் வெடிக்காமல் தவிர்க்க உதவலாம்.

ஆனால், கலவரத்துக்கான சதித் திட்டங்கள் அயல்நாட்டு உளவுத் துறையினரால் தீட்டப்படுவதை அரசியல்வாதிகளோ மதத்தலைவர்களோ கட்டுப்படுத்த முடியாது.

**Counter espionage** என்கிற எதிர்ப் புலனாய்வுப் பிரிவை பலப்படுத்தி, சதிகளைக் கண்டறி வதையும் முறியடிப்பதையும் ஒரு கலையாக்க வேண்டும்.

மதக் கலவரங்களைச் சமாளிக்க, கட்டுப்படுத்த, காவல் துறையில் ஒரு தனி விரைவுப் பிரிவு உருவாக்கப்படும் என்று தமிழக முதல்வர் சமீபத்தில் அறிவித்தார். இதைக் காட்டிலும், வருமுன் காக்கும் புலனாய்வு முயற்சிகள்தான் முக்கியம் என்பதைத் திரும்பவும் ஆணி அறைந்தாற்போல் சொல்லலாம்.

# உங்கள் இல்லத்தில் எங்கள் "சமய சஞ்சீவி"யை வரவேற்றிடுங்கள். வாழ்க்கையில் முன்னேற்றம் கண்டிடுங்கள்.






சரியான சமயத்தில் செய்யப்படும் உதவிக்கு இணையாக வேறு எதையும் கூறமுடியாது. அத்தகைய உதவியைச் செய்யும் நட்பு பொக்கிஷம் போன்றது – நட்பைப் பற்றிய இந்தக் கருத்தில் ராம் காஷ்யப் சிட்ஸ் முழு நம்பிக்கை கொண்டிருக்கிறது. **எங்கள் ஊழியர்கள், முகவர்கள்** ஆகியோர் உங்களுக்கு அளிக்கும் சேவையின் அடித்தளமாக இருப்பதும் இந்தக் கருத்துதான். அதனால்தான் அவர்களை **சமய சஞ்சீவிகள்** என்று அழைக்கிறோம். மானிடப் பண்புகள், நிலையான உறவுகள், சமூக வளம் ஆகியவற்றில் எங்களுக்குள்ள முழுமையான ஈடுபாட்டின் அடிப்படையில்தான் அவர்கள் உங்களுடைய வாழ்க்கை முன்னேற்றத்திற்கு உதவும் முயற்சிகளை மேற்கொள்கிறார்கள்.



சந்தாதாரருக்கான பரிசு

சீட்டுகளை ஒரு பயனுள்ள சேமிப்பு வழிமுறையாக மக்கள் நீண்ட நெடுங்காலமாகப் பயன்படுத்தி வருகிறார்கள். எப்போதெல்லாம் அவசியத் தேவை ஏற்படுகிறதோ அப்போதெல்லாம் அவர்களுக்கு சீட்டுகள் பேருதவியாக இருந்து வருகின்றன என்பது நிரூபணமான ஒன்று. இன்னும் சொல்லப்போனால், வளர்ந்து வரும் நாடுகளில் சீட்டுகள் மிகப்பாதுகாப்பான சேமிப்பு வழிமுறையாக விளங்கி வருகின்றன என்பதை **ஏசியன் டெவலப்மென்ட் வங்கியின்** ஆய்வறிக்கை தெளிவுபடுத்தி இருக்கிறது. நம்பகத்தன்மை, பண்பாடு, தொலைநோக்கு ஆகிய கொள்கைகளை அடிப்படையாகக் கொண்டு

# இலவச பரிசு




Johnson-Johnson

வழங்குபவர் எங்கள்

# சமய சஞ்சீவி

ராம் காஷ்யப் நிறுவனங்கள் இயங்கி வருகின்றன. அந்த நிறுவனங்களில் ஓர் அங்கமான ராம் காஷ்யப் சிட்ஸ் இந்த வழிமுறையை மிகச் சரியாக நடைமுறைப்படுத்தி வருகிறது.

மேலும் விவரங்களுக்கு கூப்பனைப் பூர்த்தி செய்து எங்களுக்கு அனுப்புங்கள். அல்லது, எங்கள் கிளைகளில் ஒன்றுடன் தொடர்பு கொள்ளுங்கள். எங்கள் சமய சஞ்சீவி உங்கள் இல்லத்திற்கே வந்து உங்களுக்கு ஒரு இலவச பரிசை அளிப்பதுடன், ராம் காஷ்யப் சிட்ஸ் அளித்திடும் அனைத்து நலன்களையும் உங்களுக்கு அறிமுகப்படுத்துவார். அவை உங்கள் வாழ்க்கையைத் தன்னம்பிக்கையோடு எதிர்நோக்கும் ஆற்றலை உங்களுக்கு அளிப்பவை. எங்கள் சமய சஞ்சீவிக்கு நல்வரவு கூறுங்கள்.



அறிமுகப்படுத்துவோருக்கான பரிசு

இந்தக் கூப்பனைப் பூர்த்தி செய்து எங்களுக்கு அனுப்பவும்.



ஆம், உங்கள் சமயசஞ்சீவியை சந்திக்க விரும்புகிறேன்.

பெயர் : ......................................

முகவரி : ......................................

...................................... போன் : ..................

......................................

தொழில் : ......................................






## Ram Kaashyap Chits

**ஈடில்லா சேமிப்பு; இணையற்ற தேர்வு**

ராம் காஷ்யப் நிறுவனங்களில் ஓர் அங்கம்

ராம் காஷ்யப் குரூப் நிறுவனங்கள் முகவரி : பதிவு அலுவலகம் : 53, பிஷப் கார்டன், சென்னை 600 028.

நிர்வாக அலுவலகம் : 14/3 தண்டபாணி தெரு, தி.நகர், சென்னை 600 017. போன் 4341513, 4330034

கிளைகள் : தமிழ்நாடு : சென்னை ; • ஆழ்வார்பேட்டை : 1/1 (கீழ்த்தளம்), சர் தேசிகா ரோடு, ஆழ்வார்பேட்டை சிக்னல் அருகில், சென்னை 600 004. போன் 4970205 • மேற்கு மாம்பலம் : 1/A, முதல் மாடி, மூர்த்தி தெரு, மேற்கு மாம்பலம், சென்னை 600 033. போன் 4896638 • அண்ணா நகர் : 102, 'D' பிளாக், N.P. டவர்ஸ் சிந்தாமணி அருகில், அண்ணா நகர் கிழக்கு, சென்னை 600 102. போன் 610979 • அடையாறு : 11, 2வது மெயின் ரோடு, காந்தி நகர், அடையாறு சென்னை 600 020. போன் 418081 • தி.நகர் : 14/3 தண்டபாணி தெரு, தி.நகர். சென்னை 600 017. போன் 4341513 • கோயம்புத்தூர் : 2வது மாடி, ஏசியாடிக் பில்டிங், 378 டாக்டர் நஞ்சப்பா ரோடு, கோயம்புத்தூர் 641 018. போன் 231886 • திண்டுக்கல் : 24 புதிய அக்ரஹாரம், திண்டுக்கல் 624 001. போன் 34218 • திருநெல்வேலி : கடை எண் 5, எவைட் காம்ப்ளக்ஸ், 182 E/24, S.N. ஹை ரோடு, திருநெல்வேலி 627 001 • கும்பகோணம் : நல்லி பிளாசா, முதல் மாடி 34 T.S.R. பெரிய தெரு, கும்பகோணம் 612 001. போன் 30246 • மதுரை : N.C.S. பில்டிங் 113-B, மேற்கு பெருமாள் மேஸ்திரி தெரு, மதுரை 624 001. போன் 741802 தஞ்சாவூர் : T.S. எண் 2547 தெற்கு மெயின் தெரு, தஞ்சாவூர் 613 009. போன் 25871 • திருச்சி : 44–45 அன்னை சிவகாமி காம்ப்ளக்ஸ், சிங்காரத் தோப்பு (சூப்பர் பஜார்) திருச்சி 620 008. போன் 704752 • ஈரோடு : ஆலூர் அம்மன் காம்ப்ளக்ஸ், 58 சத்தி ரோடு, ஈரோடு 638 003. போன் 79822 • சேலம் : 61, செர்ரி ரோடு, சேலம் 636 007. போன் 418171 • திருவாரூர் : 80–A தெற்கு தெரு, திருவாரூர் 610 002. போன் 20895 • காரைக்குடி : எண் 1, T.T. நகர், முதல் தெரு S.K.N. பில்டிங்ஸ் (கீழ்த்தளம்) காரைக்குடி 630 001.

Insight-748

# ஆபாசமா, இரட்டை அர்த்தமா? ஏவி.எம். தொலைத்து விடுவார்!

சினிமா ஷூட்டிங் எப்படி நடக்கும் என்று எனக்கு அதற்கு முன் தெரியாது. வசனங்களை மனப்பாடம் செய்து, ஆங்காங்கே சொந்தச் சரக்குகளைச் சேர்த்து மேடையில் ரகளை செய்யும் நாடகக்காரன் நான். வசனம் என்றால் ஒருவரி, இரு வரியாக இருக்காது. பக்கம் பக்கமாக! ஆரம்பித்தால் நிறுத்தவே கால்மணி ஆகும்.

ஆனால், சினிமா வசனங்கள், அதனைப் பேசும் முறை இவை எல்லாமே என் நாடக அனுபவங்களுக்குச் சற்றும் சம்பந்தமில்லாமல் இருந்தன.

முதல் நாள் ஷூட்டிங். முதலில் எடுக்கப்பட்ட காட்சியே என் சம்பந்தப்பட்டது தான். முக்கால் மணி அல்லது ஒரு மணி நேரம் ஆகியிருக்கும். எனக்கு போரடித்து விட்டது. வசனத்தை விட்டு விட்டு, துரத்திப் பிடிப்பது அலுக்கத் தொடங்கிவிட்டது.

ஒரு வரி பேசியிருப்பேன். உடனே எங்கிருந்தோ 'கட், கட்' என்று குரல் கேட்கும். கப்சிப் என்று அடங்கிவிட வேண்டியதுதான். மறுபடி கேமரா கோணம் மாற்றுவார்கள். 'ஸ்டார்ட்' சொன்ன பின், விட்ட இடத்திலிருந்து தொடங்க வேண்டும்.

''இது என்னங்க? என்னைப் பேச விடாம இப்படி 'கட் கட்'டுன்னு சொல்லிச் சொல்லி கழுத்தறுக்கறாங்களே, நான் எப்ப பேசி முடிக்கிறது?'' என்று சற்று உரக்கவே கேட்டேன்.

படப்பிடிப்புக் குழுவே ஸ்தம்பித்தது. காரணம் அங்கே ஏவி.எம். செட்டியார் இருக்கிறார். 'இந்தப் பையன் கதி என்ன ஆகுமோ' என்று அவர்களுக்குக் கவலை.

செட்டியார், சற்று நேரம் என்னை உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார். அவர் முகத்தில் சட்டென்று ஒரு புன்முறுவல் உதித்தது. அங்கிருந்த எம்.வி. ராமனைக் கூப்பிட்டார்.

''இந்தப் பையனை நடிக்க வெக்கறது அப்புறம். முதல்ல சினிமான்னா என்னன்னு




சொல்லிக் கொடுங்க'' என்றார்.

அவ்வளவுதான். ராமன் எனக்குப் பாடம் நடத்த ஆரம்பித்து விட்டார்.

சினிமாவுக்கும் நாடகத்துக்கும் என்ன வித்தியாசம்? சினிமாவை ஏன் துண்டு துண்டாக எடுக்கிறார்கள்? அது எப்படி முழு வடிவம் பெறுகிறது? கேமரா என்றால் என்ன? ஒளியை எப்படிக் கையாள்வது?

ராமன் எனக்கு விளக்கிச் சொல்லச் சொல்ல, எனக்குப் புதிது புதிதாகச் சந்தேகங்கள் இளம்பிய வண்ணம் இருந்தன.

''எல்லாம் சரி; இப்படி துண்டு துண்டா எடுத்து, எந்தக் காலத்துல முடிப்பீங்க?'' என்று கேட்டேன்.

''ஏன்? உனக்கு வேற ஏதாவது முக்கியமா, தலை போகிற வேலை இருக்கோ?''

''பின்ன? இதை முடிச்சிட்டு நான் நாடகத்துக்குப் போக வேண்டாமா? என்ன ஒரு...

# தேரோட்டம்-11



ரெண்டு, மூணு நாள்ல முடிச்சிருவீங்களா?"

ராமன் மிரண்டு போயிருக்க வேண்டும். "என்னது. ரெண்டு, மூணு நாளிலா? சரிதான்!" என்று என்னை முறைத்தவர், "உனக்கு இங்க என்ன சம்பளம் தரதா சொல்லியிருக்காங்க?" என்று கேட்டார்.

"தொண்ணூறு ரூபாய்."

"அது, ஒரு மாசத்துக்கு. படம் முடிய எப்படியும் ரெண்டு வருஷமாகும். ரெண்டாயிரத்து ஐந்நூறு ரூபாய் கிடைக்கும் உனக்கு. தவிர வேளைக்குச் சாப்பாடு, தங்க இடம், எல்லாம் கிடைக்குது. கசக்குதா?" என்று கேட்டார்.

கசக்கவில்லைதான். "இருந்தாலும் நாடகம்..."

"அதெல்லாம் இனிமே மறந்துடு ராமசாமி. இனிமே நீ நாடகக்காரன் இல்லை. சினிமாக்காரன். இந்தப் படத்தோட இது முடிஞ்சிடறதில்லை. பின்னால நிறைய படங்களில் நடிக்கலாம். வேற கம்பெனி படங்களிலேயும் நடிக்கலாம். கவலையே படாதே. பிற்காலத்துல நீ நல்லா வருவே" என்று நம்பிக்கை கொள்ளும் விதமாகப் பேசினார் எம்.வி. ராமன்.

திரையுலகம் எனக்குக் கற்றுத்தந்த பாடங்கள் ஏராளம். அவற்றைப் பற்றியெல்லாம் பின்னால் விரிவாகச் சொல்லுவேன். ஆனால் திரையுலகைப் பற்றி எனக்குப் பாடம் கற்றுத் தந்த முதல் நபர் எம்.வி. ராமன்தான். எடிட்டராகவும் இயக்குநராகவும் பின்னாளில் நல்ல புகழடைந்த ராமன், அந்நாளில் ஏவி.எம். அவர்களின் நம்பிக்கைக்குரிய ஊழியராக இருந்தார்.

இதற்கிடையில் என்னுடைய சினிமா பிரவேசம் பற்றிய தகவல் விருதுப்பட்டியை எட்டியிருந்தது. 'நம்ம ஊர் பையன் சினிமாவுல சக்கைப் போடு(!) போடறானாமில்லே?' என்று ஊர்க்காரர்கள் பெருமையாகப் பேசிக் கொள்வதாகக் கேள்விப்பட்டு, சிரித்துக் கொண்டேன். சினிமா என்னை சக்கையாகப் பிழிய ஆரம்பித்திருந்தது என்பதுதான் உண்மை.

ஊரிலிருந்து என் அப்பா எனக்குக் கடிதம் எழுதியிருந்தார். பணம் நிறைய புழங்கும் சினிமா உலகில், அதன் மதிப்புத் தெரிந்து நடந்து கொள்ள வேண்டும் என்றும் பணத்தை செலவழிப்பது சுலபம்; சேமிப்பதில் தான் சவால் இருக்கிறது என்றும், நான் நல்லபடியாக நடித்துப் புகழோடு வர வேண்டும் என்று விரும்புவதாகவும் கடிதத்தில் குறிப்பிட்டிருந்தார்.

எனக்கு அந்தக் கடிதம் பெரிய ஆறுதலாகவும் எழுச்சி தரக்கூடியதாகவும் இருந்தது. புத்துணர்ச்சியுடன் நடிக்க ஆரம்பித்தேன்.

என்.எஸ்.கே சபாவில் நான் நடித்துக் கொண்டிருந்த காலத்தில், நாடக வசனங்களை என் இஷ்டத்துக்கு மாற்றியும், புதிது புதிதாக சொந்தச் சரக்குகளைச் சேர்த்தும் பேசி வந்தேன்.

அப்போதெல்லாம் எனக்கு இரட்டை அர்த்தம் தொனிக்கும் வசனங்கள் மேல் ஒரு மோகம்.

எந்த நாடகமாயிருந்தாலும் சாமர்த்தியமாக என் பகுதி வரைக்கும் இரட்டை அர்த்த வசனங்களைத் திணித்து, பேசி இடுக்கிட வைப்பதில் சமர்த்தனாயிருந்தேன்.

பின்னால் என் நாடக ஆசிரியர் சம்பந்தம் அவர்களின் அறிவுரைப்படி அவற்றைத் தவிர்த்து விட்டாலும் 'சொந்தச் சரக்கு' நுழைப்பதை மட்டும் விடாப்பிடியாகப் பிடித்துக் கொண்டிருந்தேன். அதில் அப்படியொரு மோகம்.

ஆனால், சினிமாவுக்கு வந்தபின் அதற்கு வாய்ப்பு இல்லாமல் போனது எனக்கொரு இழப்பாகவே தெரிந்தது. எழுதிக் கொடுக்

**'நாம் இருவர்' படத்தில் எனக்கு ஜோடியாக நடித்தவர் கே.ஆர். செல்லம்மா என்கிற நடிகை. அந்நாளில் அவர் பெரிய 'கவர்ச்சி' நடிகை. அவருக்கென ஒரு ரசிகர் பட்டாளம் உண்டு. மிகுந்த பந்தாவுடன் ஷூட்டிங்குக்கு வருவார். மிடுக்காக, கால்மேல் கால் போட்டு அமர்ந்து, "டேய் ராமசாமி, என் டயலாக் எல்லாம் உனக்குத் தெரியுமில்லே? எனக்குச் சொல்லிக் குடுடா!" என்பார்.**

## வி.கே. ராமசாமி

கப்பட்ட வசனங்களை, டைரக்டர் சொல்லிக் கொடுத்தபடிதான் பேச வேண்டும்.

ஆபாசமா, இரட்டை அர்த்தமா? ஏவி.எம். அவர்கள் தொலைத்து விடுவார்! கண்ணிய மான, குடும்பப்பாங்கான, தேச பக்தி மிக்க வசனங்கள்தாம் அவரது படத்தில் இருக்கும். அதுவே பழகப் பழக, எனக்கும் கண்ணியமான வசனங்களின்மேல் ஒரு காதலே பிறந்து விட்டது.

'நாம் இருவர்' படத்தில் எனக்கு ஜோடியாக நடித்தவர் கே.ஆர். செல்லம்மா என்கிற நடிகை. அந்நாளில் அவர் பெரிய 'கவர்ச்சி' நடிகை. அவருக்கென ஒரு ரசிகர் பட்டாளம் உண்டு. மிகுந்த பந்தாவுடன் ஷூட்டிங்குக்கு வருவார். மிடுக்காக, கால்மேல் கால் போட்டு அமர்ந்து, "டேய் ராமசாமி, என் டயலாக் எல்லாம் உனக்குத் தெரியுமில்லே? எனக்குச் சொல்லிக்குடுடா!" என்பார்.

நானும் பவ்யமாக அவருக்கு வசனங்களைச் சொல்லிக் கொடுப்பேன்.

படம் மெதுவாக வளர்ந்து கொண்டிருந்தது. தேவகோட்டையே என் சொந்த ஊர் என்பதுபோலவே ஆகிப்போனது.




அந்த நேரத்தில் ஹிந்தியில் பரபரப்பாக ஓடி வெற்றி கண்ட 'ராமராஜ்யா' என்ற படத்தின் தமிழ் டப்பிங் பணிகள் ஏவி.எம்.மில் நடந்து கொண்டிருந்தன. அந்தப் படத்தில் ஒரு சலவைத் தொழிலாளி பாத்திரம். அதற்கு டப்பிங் பேச கிட்டத்தட்ட பத்துப் பதினைந்து பேரை முயற்சி செய்து பார்த்துவிட்டு, ஒன்றும் சரிப்படாமல் தவித்துக் கொண்டிருந்தார்கள், டப்பிங் இன்சார்ஜாக இருந்த தேவநாராயணனும் லட்சுமி நாராயணனும்.

ஜீவாதான் ஷூட்டிங்கில் என் குரல் ஏற்ற இறக்கங்களைக் கவனித்துவிட்டு, அந்தப் பாத்திரத்துக்கு நான் குரல் கொடுத்தால் நன்றாக இருக்கும் என்று முடிவு செய்து என்னை தேவநாராயணனிடம் கூட்டிச் போனார்.

டப்பிங் பேசுவது எப்படி என்று ஜீவா சொல்லிக் கொடுக்க, அந்த 'ராமராஜ்யா'வில் டப்பிங் பேசிய அனுபவம் எனக்கு மறக்க முடியாத ஒன்றாக அமைந்து விட்டது.

தேவநாராயணன் என்னை மிகவும் பாராட்டினார். சிறப்பாகச் செய்திருப்பதாக ஓஹோ என்று புகழ்ந்தார். விஷயம் ஏவி.எம். செட்டியார் அவர்களின் காதுக்குப் போக, அவர் வந்து பார்த்துவிட்டு என்னைத் தட்டிக் கொடுத்தார்.

கம்பெனியில் எனக்குப் பேசப்பட்ட சம்பளம் தவிர இதற்காகத் தனியாக ஒரு தொகை வேறு கொடுக்க, என் சந்தோஷத்துக்குக் கேட்கவா வேண்டும்?

ஒன்றரை வருடங்களுக்கு மேலாகத் தயாரிப்பில் இருந்த 'நாம் இருவர்' ஒருவழியாக 1947, ஜனவரி 14 அன்று வெளியானது.

இந்தியாவுக்கு சுதந்திரம் கிடைப்பதற்கான பேச்சுவார்த்தைகள் நடந்து கொண்டிருந்த நேரம் அது. நிச்சயம் சுதந்திரம் வந்துவிடும் என்று உறுதியாகியிருந்த சமயம்.

'ஆடுவோமே பள்ளு பாடுவோமே
ஆனந்த சுதந்திரம் அடைந்து விட்டோமென்று ஆடுவோமே' - இந்தப் பாடல் 'நாம் இருவர்' படத்தின் ஹைலைட்டாக அமைய, மக்கள் உற்சாகம் பீறிட்டெழ படம் வெளியான தியேட்டர்களில் வெள்ளமாகக் குவிந்து விட்டார்கள்!

சுதந்தர உணர்ச்சியை அடிநாதமாகக் கொண்ட அந்தக் 'குடும்பப் படம்' இமாலய வெற்றி கண்டது. திரையுலகில் என் தடம் அழுத்தமாகப் பதிய அந்தப் படமே காரணமாயிற்று.

படம் எங்கெங்கெல்லாம் ரிலீஸ் ஆனதோ அந்தந்த ஊருக்கெல்லாம் எங்களை அனுப்பி, மக்களுடன் சேர்ந்து படம் பார்க்க ஏற்பாடு செய்தார் செட்டியார். மக்கள் எதையெல்லாம் ரசிக்கிறார்கள்; எதை விரும்பவில்லை என்பதை நேரடியாகச் சென்று பார்த்து அறிந்து வரும் பழக்கம் அப்போது தொடங்கியதுதான். இன்றும் திரையுலகினரால் கடைப்பிடிக்கப் பட்டு வரும் வழக்கம் இது!

'நாம் இருவர்' படத்தின் வெற்றி சாதாரணமானதல்ல! ஏவி.எம். அவர்களின் அயராத உழைப்பு, நேர்மை, கலை மீது அவர் கொண்டிருந்த பற்று, வெறி இவற்றுக்குக் கிடைத்த பரிசு அது!

அந்தப் படத்தில் ஆன வசூலில் உருவானதுதான் இன்று ஆலமரமாகத் தழைத்து, உயர்ந்தோங்கி நிற்கும் ஏவி.எம். ஸ்டுடியோ.

(தொடரும்)

## நாற்பதாயிரம் பேர்; பன்னிரண்டே கழிவறைகள்!

மும்பையின் முன்னேற்றத்திற்கு எக்கச்சக்கமான திட்டங்களை அறிவித்திருக்கிறார் சிவசேனைத் தலைவர். மும்பையை அழகுபடுத்தும் திட்டம்; அபராதத் தொகைகள் அதிகரிக்கப்பட்டு, ஊறுவிளைவிப்பவர்கள் (சிவசேனைக்காரர்களாயிருப்பினும்!) தண்டிக்கப்பட வேண்டுமென்ற திட்டம்; ஏழை எளியவர்கள், க்ளாஸ் நான்கு அலுவலர்கள் முதலானோருக்கு வீட்டு வசதித் திட்டம், போக்குவரத்து நெரிசலைத் தடுக்க, முப்பத்தாறு மேம்பாலங்களைக் கட்டும் திட்டம்; கான்க்ரீட் போடப்படும் சாலைகள், பத்து வருட க்யாரண்டி காலத்துக்குள் வாயைப் பிளந்தால், சம்பந்தப்பட்ட காண்ட்ராக்டர்களின் 'மண்டையைப் பிளக்கும்' (அபராதம், தண்டனை, ப்ளாக் லிஸ்ட்தான்!) திட்டம் என பலவாறாக வாரி வழங்கியுள்ளார்.

செம்பூர் ஸ்ரீநகர் காலனிவாசிகள் (1500) கடந்த மூன்றாண்டுகாலமாக குடிநீருடன் சாக்கடை நீரையும் சேர்ந்தே குடிப்பதையும், வத்சலாதாயி நாயக் குடிசைவாசிகள் 40,000 பேரும் பன்னிரண்டே கழிவறைகளுடன் நாறிக் கொண்டிருப்பதையும் யாராவது தாக்கரே காதில் போட்டால் சரி!

## 'கேட்'டதும் கொடுத்தவர்!

'கேட்வே ஆஃப் இந்தியாவை', கேட்ஸ்வே ஆஃப் இந்தியாவாக்கி கார்ட்டூன் போடுமளவுக்கு ஒரு பரவசத்தை ஏற்படுத்தியது, ஸாஃப்ட்வேர் மன்னன் 'பில்கேட்ஸின்' மும்பை 'விசிட்'! பொதுவாக, அரசியல்வாதிகளுக்கும், சினிமா கலைஞர்களுக்கும் மட்டுமே கிட்டும் ஆர்வ அலைமோதல், இவருக்கும் பிராப்தித்தது! உலகின் 'நம்பர் ஒன்' பணக்காரார் என்னவோ தம் கூடவே டாலர்களைச் சுமந்து கொண்டு செல்வது போல, அப்படி ஒரு செக்யூரிட்டி! புல்லட் ப்ரூஃப் கார் என்ன... மஃப்டியிலும் யூனிஃபார்மிலுமாக எக்கச்சக்க போலீஸ் என்ன... சிவப்புக் கம்பள வரவேற்பென்ன... தேவேகௌடாவிலிருந்து தேவ்ரா வரையிலான தலைவர்களும், சின்ன-பெரிய தொழிலதிபர்களும் எந்த 'விண்டோ'வைத் தட்டினால் இந்த 'கேட்ஸை'த் திறக்கலாம் எனப் பார்த்துப் பார்த்து செய்த உபசரணைகள் வீண் போகவில்லை! எல்லோருமாக வைத்த 'ஐஸி'ல் உச்சி குளிர்ந்து, எதிர்பார்த்ததற்கும் மேலாக இங்கே முதலீடு செய்ய இசைந்திருக்கிறார் இந்த கம்ப்யூட்டர் குரு. இவர் பிரபல ஹார்வார்ட் அமெரிக்கப் பல்கலைக் கழகத்தில் சேர்ந்து படிப்பைப் பாதியில் விட்டவர் என்பது, இந்தப் பரீட்சை சமயத்தில், எக்ஸாம் ஃபீவரில் அனற்றிக் கொண்டிருப்பவர்களுக்கு 'ஜில்' நியூஸ்!

# கேள்வி கேட்டால் பொங்குகிறார் சேஷன்!

## தமிழ்நாட்டைப் போலத்தான்...

மும்பையில், காங்கிரஸ் கட்சித் தலைமைக்கு சகன்புஜ்பல்தான் வேண்டும் என ஒரு கோஷ்டியும், குருதாஸ் காமத்தான் வேண்டுமென மற்றொன்றும் வேண்ட, இந்த இருவருமே ஷரத் பவாருக்கு வேண்டியவர்கள் என்பதால், கேசரியால் நிராகரிக்கப்பட்டு விட்டார்கள்! கடைசியில் முரளிதேவ்ரா சிபாரிசு செய்த ஷரத் திகேவுக்கு அடித்தது யோகம்! மூச்சு நின்று விட்ட உடலுக்கு இன்ஜெக்ஷன் போட்டால் என்ன, காப்ஸ்யூல் கொடுத்தால்

என்ன என்ற நிலையில்தான் காங்கிரஸ்காரர்கள் இன்று தேவ்ராவின் ராஜினாமாவையும் திகேஷின் தலைமையையும் ஏற்றிருக்கிறார்கள்!

## தினமும் வரும் விருந்தாளி!

பவர்கட்! வேனிற்காலத்துடன் கைகோத்துக் கொண்டு ஜோடியாக, நல்ல நாள்



பார்த்து சென்ற வெள்ளியன்று மாலை, ஆர்ப்பாட்டமாக வந்திறங்கி, மும்பையையும், மாநிலம் முழுவதையும் ஒரு கலக்குக் கலக்கி விட்டது. ஒரே நாளில் 25 கோடி நஷ்டம்; 30 சதம் தண்ணீர் கட்; ட்ரெயின்கள் ஓடாததால், டாக்ஸி வாலாக்களின் அடாவடி; பஸ்களில் நெரிசல்... அப்பப்பா! அதுவும் மும்பைவாசிகளை 'பவர்கட்'டுக்கு ரொம்பப் பிடித்து விட்டதால், தினம் தவறாமல் 'தலை'யைக் காட்டி, 'ஹலோ' சொல்லாமல் விடுவதில்லை!

## புதுமை பிரமோஷன்

ராம் கவண்டேவுக்கு, மராத்திய அரசு, டி.ஐ.ஜியிலிருந்து ஐ.ஜியாகப் பதவி உயர்வளித்து கௌரவித்தது. இதில் அதிசயம் என்ன...? 'பிரமோஷன்' ஆர்டர் வந்த அன்றுதான் கவண்டே ரிடையர் ஆனார். இந்த பிரமோஷன் உத்தரவு கடந்த ஆறு மாத காலமாக அரசிடம் தூங்கிக் கொண்டிருந்தது; அவர்கள் ஒருவழியாக விழித்தெழுந்த போது, இவர் ஓய்வு பெற்றுவிட்டார், பாவம்!

## தேசபக்தி – 'சேஷன் பிராண்ட்'!

சேஷன் ஆரம்பித்திருக்கும் 'தேச பக்தி ட்ரஸ்ட்' சம்பந்தமாக சர்ச்சைகளும் ஆரம்பித்து விட்டன! இதன் முதல் அகில இந்தியக் கூட்டத்தில் பங்கெடுக்க மும்பை வந்த சேஷன்; நேராகத் தாக்கரேவைப் போய்ப் பார்த்து, பதினைந்து நிமிடம் உரையாடிவிட்டு வந்திருக்கிறார். "என்ன பேசினீர்கள்?" என எல்லோரும் வினவியபோது, "அது பற்றிக் கேள்வி கேட்க யாருக்கும் உரிமை இல்லை" எனக் கூறியிருக்கிறார்! "நீங்கள் சந்திராசுவாமியிடம் வைர மோதிரம் பெற்றுக் கொண்டதாய் கைர்நார் சொல்கிறாரே?" என்றதற்கு, "அது சந்திராசுவாமிக்கும் என் விரலுக்குமிடையேயுள்ள விஷயம்; அதுபற்றிக் கேள்வி கேட்க நீங்கள் யார்?" எனக் கோபப்பட்டிருக்கிறார்.



• மேனகா காந்தி

• சேஷன்



## மேனகாவின் வெற்றி!

அண்மையில் மும்பைக்கு, இரண்டு "சாரிடி ஷோ"க்கள். பாரீஸைச் சேர்ந்த ஜூனே சிங், வரதட்சணைக் கொடுமையால் பாதிக்கப்பட்ட பெண்களின் நலனுக்கென்று, "டாப் மாடல்"களை வைத்துக் கொண்டு ஃபாஷன் ஷோ நடத்தினார். ம்..ஹூம்... "ஷோ"பிக்கவில்லை!

அடுத்து மேனகா காந்தி, ஃபாஷன் ஜூவல்லரி கண்காட்சி நடத்தி, 30 சத வசூலை விலங்கின நலனுக்கென்று அறிவித்தார். ஓஹோவென்ற வரவேற்பு! நோக்கம் உயர்வாக இருந்தாலும், அதை அடையும் வழியும் முறையானதாக இருக்க வேண்டுமென்பது மும்பை கற்றுத் தந்த பாடம்!

. மும்பையிலிருந்து : **ஜெயஸ்ரீ ராஜ்**

மீண்டும் மத்யமர் கதைகள் – 11

சுஜாதா

# ஞானோதயம்

அவளை ஒரு நட்சத்திர ஓட்டலின் லாபியில் கதவைத் திறந்து சாவி கொடுக்கும் பெண்ணாகத்தான் பார்த்தேன். செம்பருத்தி நிற சாரி அணிந்து மார்பில் 'ட்ரெய்னி' என்று எனாமலில் அறிவித்தாள். ஒருமுறைதான் பார்த்தாள்.

''குட்மார்னிங் மிஸ்டர் கோவிந்தராஜ்.''

என் பெயரைத் தெரிந்திராவிட்டால் ஓட்டலில் வேலை போயிருக்கும். உடனே எனக்குக் காதல் ஏற்பட்டது என்று சொல்ல மாட்டேன். காதல், ஹார்மோன் சமாசாரம் என்று ஏரோப்ளேன் பத்திரிகையில் படித்திருக்கிறேன்.

இந்தப் பெண்ணைக் கண்டதும் கெமிஸ்ட்ரி மாறி விட்டது. அண்ணனை சரித்ரா ஓட்டலுக்கு வரச் சொன்னேன். லாபியில் இருந்த ரிசப்ஷன் டெஸ்கில் காதில் போனை வைத்துக் கொண்டு யாரோ ஒரு கிழவருடன் பரிவாகப் பேசிக் கொண்டிருந்தாள்.

"அந்தப் பெண்ணைப் பார்; அவளை நான் கல்யாணம் செய்து கொள்ள வேண்டும்."

நான் அவ்வப்போது எதிர்பாராமல் செய்யும் கிறுக்குத்தனமான காரியங்களை சகித்துக் கொண்டிருப்பவன்தான். இருந்தும் இது அவனைத் தாக்கியிருக்க வேண்டும்.

"யு மஸ்ட் பி ஜோக்கிங்! உனக்காக சுதா, கவிதா, தாமினி என்று எத்தனை பேர் காத்திருக்கிறார்கள். பாரு, பணம் பணத்தைக் கல்யாணம் செய்து கொள்ள வேண்டும் என்பது இந்த விளையாட்டின் அபரா நியதி. அதுவும் மெர்ஜர் சமயத்தில் நீ பரதநாட்டியம் ஆடும் சுதா சுப்ரமண்யத்தைக் கல்யாணம் செய்து கொள்ளாவிட்டால் கம்பெனி கவிழ்ந்து விடும்."

"இவன்தான் இவன்தான்" என்றேன் பிடிவாதக் குழந்தை போல். "அவளுடன் பேசிச் சொல்லு."

"பார்த்தால், அப்படி ஒன்றும் அழகாக இல்லையே, கருப்பு."

"நான் மட்டும் என்ன அழகு?"

"உன் அழகு அந்தஸ்தால் வருவது. பணக்காரர்கள் அனைவருமே அழகு." மீண்டும் ஒருமுறை அவளைப் பார்த்தான்.

"அண்ணியிடம் சொல்லு. அவள்தான் இந்த விசாரிப்பில் எல்லாம் கெட்டிக்காரி." அண்ணி என் தாய் ஸ்தானம்.

"சொல்கிறேன். முதலில் இவள் யார்? தெரிய வேண்டும். உன்னால் தலைவலிதான் கோவிந்த். நான் சுப்ரமண்யத்துக்கு என்ன பதில் சொல்வேன்?"



அந்த வாரம் முழுதும் அந்த ஓட்டலுக்குச் சென்று லாபியில் உட்கார்ந்து கொண்டு கையில் 'ஃபார்ச்சுன்' இதழை வைத்துக் கொண்டு அவளைப் படித்துக் கொண்டிருந்தேன். அவ்வப்போது என்னை சங்கடத்துடன் கவனித்தாள். கவலையுடன் ஒருமுறை என்னிடம் வந்து, "எக்ஸ்க்யூஸ் மீ. உங்களுக்கு எதாவது தேவையா?" என்றாள்.

"இல்லையே!"

"எதற்காக என்னையே பார்த்துக் கொண்டிருக்கிறீர்கள்?"

"எனக்கு அது பிடிக்கிறது."

"எனக்குச் சங்கடமாக இருக்கிறது. வேலையில் கவனம் செலுத்த முடியவில்லை. உங்கள் பார்வை உறுத்துகிறது. மன்னிக்க வேண்டும்."

"அப்படியெனில் எங்காவது நாம் சந்திக்கலாமே!" என்றேன்.

"மன்னிக்கவும். என் தந்தை அதை அனுமதிக்க மாட்டார்!"

அந்த வார்த்தையைக் கேட்டதும் அணைந்து போனேன். உற்சாகம் குறைந்து, ஒரு வாரம் ஆபீஸ் போகவில்லை. சன்மார்க் போர்டு மீட்டிங் இருந்தது. மறந்து விட்டேன்.

காமேஸ்வரி அண்ணியிடம் அரவிந்த் சொல்லியிருக்க வேண்டும். ஒருநாள் என்னை போனில் கூப்பிட்டாள்.

''என்னப்பா அந்தப் பொண்ணை நெனைச்சு உருகுறியாம்!''

"அண்ணி, ஆனா..."

"அவ பேரு பத்மா. அப்பா பேரு கதர்க் கடை விசுவநாதன். அவ பி.எஸ்ஸி., முடிச் சுட்டு அடையாறு கேட்டரிங் இன்ஸ்டிடி யூட்ல டிப்ளமா வாங்கிருக்கா. அந்த ஓட்டல்ல ட்ரெய்னி. சம்பளம் மூவாயிரம். அப்பா, அம்மா வயசானவங்க. ஒரு தங்கை, தம்பி. சின்னப் பிள்ளைங்க."

"அண்ணி, அந்தப் பொண்ணைக் கட்டிக் கலாமான்னு யோசிச்சேன்."



"ஐயோ! என்ன டாக்டர். மாட்டுக்குப் போடற மாதிரி இவ்வளவு பெரிய ஊசியோட வரீங்க!"

"என்ன விளை யாடறீங்களா? போன தடவை ஊசி போட்டுண்டபோது, என்ன டாக்டர், இத்தனூண்டு ஊசிக்குப் போயி அம்பது ரூபாய் 'ஃபீஸா'ன்னு நீங்க கேட்கலை!"

– வி.ரெங்கநாதன்

"காதலா?"

"அந்த மாதிரி ஒண்ணு."

''பொண்ணைப் பார்த்து ரெண்டு வார்த்தை பேசினேன். கொஞ்சம் மாநிறமா, உயரமா."

"ஆமாம். ஓட்டல் சரித்ரால ட்ரெய்னி."

"அந்தப் பொண்ணு நம்ம குடும்பத்துக்குப் பொருத்தம் இல்லை. ரிட்டயர்டு வாத்தி யாருடைய மக. நம்ம ஜெட் வேக வாழ்க்கை முறைக்கு ஈடுகொடுக்க முடியாது. அப்பா, அம்மா வயசானவங்க. அப்பா 1942ஐ விட்டு வெளிய வரலை. இவ கூடத்தான் அவங்க இருந்தாகணும்."

ஒரு வாரம் சிங்கப்பூர் மலேசியா சார வாக் போய்விட்டு, ஷிப்பிங் கம்பெனி டிம்பர் விவகாரங்களையும் பார்த்துவிட்டு வந்த போது, அண்ணி கூப்பிட்டிருந்தது வாய்ஸ் மெய்லில் இருந்தது.

"மேற்கொண்டு சந்திச்சுப் பேசினேன். அவங்க அப்பா பயப்படறாரு. பெரிய இடம் வேண்டாம்ங்கறாங்க."

"ஏனாம்?"

"அதை நான் கேக்கலை. அவர் காந்திய வாதி. எப்பவும் கதர் பனியன், இப்ப கூட தக்ளி நூக்கறாரு. ரமண மகரிஷி அது இதுன்னு பேசறார். அமெரிக்கா மாப்பிள்ளை கிடையாது, பணக்கார மாப்பிள்ளை கிடை யாதுன்னு அடிச்சு சொல்லிட்டார். சுருக்கமா சொன்னா அவங்க ஸ்டேட்டஸுக்கு தகுந்த மாப்பிள்ளை வேணுமாம்."

"சரி நான் போய் அவரைப் பார்க்கறேன்."

"நம்ம அந்தஸ்தைப் பத்தி பேச்சு எடுக் காதே."

"ஏன்?"

"பயந்துப்பாங்க."

நான் புறப்படும்போது அண்ணி, "காரை அவங்க வீட்டு வாசல்ல கொண்டு நிறுத்தாதே. தெருமுனைல எறங்கிக்கிட்டு நடந்து போ. ஒரே ஒரு எலுமிச்சம் பழமும் கொஞ்சம் பூவும் வாங்கிட்டு போ. பூக்கடை, பழக் கடையே வாங்கிக்கிட்டு கூடை கூடை யாப் போவாதே."

"அண்ணி யு ஆர் கிரேட்!" என்றேன்.

விசுவநாதன் பார்ப்பதற்கு பாபா ஆம்டே போல இருந்தார். வயசானாலும் முடி இழக்காமல் அடர்த்தியான வெண் மயிர். பற்கள் பழுப்பாக பொய்யில்லாமல் இருந்தன. மூக்கருகில் ஒரு மச்சம் கவனத்தைக் கலைத்தது.

பால் பெரண்டன்னின் ரமண மகரிஷி பற்றிய புத்தகத்தைப் படித்துக் கொண்டிருந்த வர், என்னைக் கண்டதும், "வாங்க தம்பி, உங்க அக்காதானே வந்துச்சு?" என்றார்.

"அக்கா இல்லை, அண்ணி."

"நீங்கள்ளாம் ரொம்பப் பணக்காரங்க போல இருக்கே."

"ஏங்க? பணம் ஒரு சௌகரியம் இல் லையா? பாருங்க, இதெல்லாம்... நல்ல நல்ல புத்தகங்கள் வாங்க முடியும்."

"தேவையில்லை. எல்லாமே லைப்ரரி புத்தகம்!"

"என்ன ஆகும்னு நீங்க பயப்படறீங்க?"

"சொல்றேன்."

'பத்மா, பத்மா' என்று அழைத்தார். என் மூக்கு நுனி, விரல்நுனியில் மில்லி வோல்ட் மின்சாரங்கள் தொட்டன. பத்மா உள்ளே வந்தாள். எளிய காட்டன் சேலை உடுத்தியிருந் தாள். நெற்றி அகலத்துக்குப் பொருத்தமான

**நீங்கள் நாற்பது வயதுக்குட்பட்டவரா..? எடுங்கள் பேனாவை... எழுதுங்கள் ஒரு**

# இரண்டு பக்கச் சிறுகதை!

சுஜாதாவின் 'மீண்டும் மத்யமர்' கதைகளை ஆவலுடன் படித்து வரும் இளம் வாசகர்களுக்கு, ஓர் இனிய அறிவிப்பு!

ஏதாவது ஒரு நிகழ்ச்சியை கருவாகக் கொண்டு கல்கியில் இரண்டு பக்கம் வரக் கூடிய ஒரு சிறுகதையை எழுதுங்கள். சுஜாதா தலைமையில் ஒரு சிறுகதைப் பட்டறையில் பங்கேற்கும் வாய்ப்பைப் பெறுங்கள்!

## நிபந்தனைகள்:

- உங்கள் கதை கல்கியில் இரண்டு பக்கங்களுக்குள் அடங்கும்படி அமைய வேண்டும்.
- நீங்கள் நாற்பது வயதுக்குட்பட்டவர் என்ற உறுதிமொழியுடன் கதை உங்கள் சொந்தக் கற்பனை என்கிற வாக்குமூலமும் இணைக்கப்பட வேண்டும்.
- உறையின் மேல் 'இரு பக்கச் சிறுகதை' என்று குறிப்பிட்டு 31.3.97க்குள் எங்களுக்குக் கிடைக்கும்படி அனுப்பி வையுங்கள்.
- தலைசிறந்த ஐந்து கதைகள் தேர்வாகி, கல்கியில் பிரசுரமாகும்.

**அந்த ஐந்து கதைகளை எழுதியவர்கள், சுஜாதா தலைமையில் நடக்கவிருக்கும் சிறுகதைப் பட்டறையில் பங்கேற்க அழைக்கப்படுவார்கள். சுஜாதாவின் மத்யமர் கதைகளை அலசி விமர்சிக்கும் ஒரு கருத்தரங்கமாகவும் அந்தப் பட்டறை அமையும்.**

**விவரங்களின் தொகுப்பு கல்கியில் வெளியாகும்.**

**எடுங்கள் பேனாவை!**
**வாழ்த்துக்கள்!**

– ஆசிரியர்



பெரிசும் சிறிசும் இல்லாத பொட்டு. என்னைப் பார்த்து சட்டென வேறு பக்கம் பார்த்தாள்.

"பத்மா, இவரை சந்திச்சிருக்கியா?"

"சந்திச்சிருக்கேன், ஓட்டல் லாபியில வெச்சு."

" 'வச்சு'ங்கறீங்களே நீங்கள்ளாம் திருநெல்வேலிக்காரங்களா?"

"ஆமா."

"நாங்களும் திருநெல்வேலிதான்!"

"தெரியும் தம்பி. அந்தக் காரணம் போதாது என் மகளைக் கட்டிக்க" என்று சிரித்தார்.

"பின்னே என்ன தேவை?" என்றேன்.

"உங்க அண்ணியா அது? அவங்க வந்து விசாரிச்சப்புறம் அவங்களும் சொன்னாங்க திருநெல்வேலின்னு. நாம உறவாக் கூட இருக்கலாம். பிள்ளைமார்தான நீங்க? ஆனா உங்க குடும்பம் எத்தனை பணக்காரங்கன்னு லேசா விசாரிக்கப் பார்த்தேன். ஆர்வி இண்டஸ்ட்ரீஸ் வெள்ளியம்பலத்தோட இளைய மகன் நீங்க, அப்படித்தானே?"

"ஆமாங்க."

"உங்க பேரு கோவிந்தராஜன், மூத்தவரு அரவிந்தராஜன்."

"ஆமாங்க."

"மொத்த டர்ன் ஓவர் ஆயிரம் கோடியா?"

"அவ்வளவு இல்லைங்க!"

"பின்ன?"

"தொளாயிரத்து எண்பது!" என்றேன் சங்கடமாக.

"என்ன பொருள் உற்பத்தி செய்றீங்க?"

"எல்லாங்க. காஸ்மெட்டிக்ஸ், பாமாயில், இண்டஸ்ட்ரியல் குட்ஸ் ஓஇஎம் சப்ளைஸ், எலக்ட்ரானிக்ஸ்."

"எல்லாம் எளிய மக்களுக்குப் பொருந்தாத ஒரு நாகரிகத்தைப் போதிக்கிற, நுகர்பொருள் கலாசாரத்தினுடைய அடையாளங்க..."

நான் சுற்றிலும் பார்த்தேன். அம்பேத்கார், மார்க்ஸ், காந்தி, வள்ளலார்.... எப்படிப்பட்ட மனிதர் இவர்?

"என்ன பத்மா? ஆயிரம் கோடியை மணக்கச் சம்மதமா உனக்கு?"

அவள் தரையைப் பார்த்தாள். ஒருமுறை, ஒரே ஒருமுறை என்னைப் பார்த்தாள். "நீங்க எனக்கு எது நல்லதுன்னு தீர்மானிக்கிறீங்களோ அதாம்பா எனக்கு நல்லது."

"எப்படி வளத்திருக்கேன் பாருங்க எம் பொண்ணை!" என்று பூரித்தார்.

"தீர்மானம் இதுதான். அதிக பணம் ஒரு சாபம். கோவிச்சுக்காதீங்க தம்பி. உங்க கம்பெனி உலகம் பூரா பரவிருக்கா?"

"அப்படி எதும் இல்லைங்க. மலேசியாவில, சாரவாக் சிங்கப்பூர்ல... அப்புறம் பாங்காக்,

ஆங்காங்..."

"தம்பி, மகாபாரதத்தில யக்ஷப் பர்சைனைல ஒண்ணு சொல்றேன் கேளுங்க. 'சந்தோஷமான வாழ்க்கைங்கறது' எதுன்னு தர்ம புத்திரனை யக்ஷன் கேக்கறான்."

நான் இருப்பிடத்தில் நெளிந்தேன்.

"எந்த மனிதன் கடனில்லாதவனாவும் பிழைப்புக்காக வேற்று தேசம் செல்லாதவனாகவும் பகல் பன்னிரண்டு மணியிலிருந்து ரெண்டு மணிக்குள்ள வீட்டில சமைச்ச கீரையும் சோறும் உண்பவனாக உள்ளானோ அவன்தான் சந்தோஷமா இருக்கிறவன்."

"வாஸ்தவம்தாங்க."

"உங்க கம்பெனில எவ்வளவு கடன் வாங்கிருக்கீங்க?"

"பாங்கில கடன் வாங்கறது எங்க பிசினஸ்ல சாதாரணம்ங்க."

"பிழைப்புக்காக மலேசிய சாரவாக்ன்ல்லாம் போறீங்க. இல்லையா? விதவிதமா ஓட்டல்ல பிசினஸ் லஞ்க அது இதுன்னு பலதுமான உணவு வகைகளை சாப்பிடுவீங்க இல்லையா?"

"ஆமாம்."

"அந்தப் பர்சைனையில் உள்ள அத்தனையும் மீறீங்க. இது எல்லாத்தையும் விட்டுட்டு வாங்க. எம் பொண்ணை உங்களுக்குக் கொடுக்கறேன்" என்றார்.

"புரியலை."

"நீங்க என் பெண்ணைக் கல்யாணம் செய்துக்கணும்னா, உங்க சொத்துக்கள் அத்தனையும் விட்டுக் கொடுத்துட்டு வெறுங் கையோட வரணும். நாங்க உங்க அந்தஸ்துக்கு மேல வரமாட்டோம். நீங்க கீழ வருவீங்களா?"

"அதுக்கு என்ன செய்யணும்?"




சொன்னார்.

**நா**ன் செய்ததைத் தியாகம் என்று சொல்ல மாட்டேன். காதல் என்பது அத்தனை பெரிய உந்து சக்தியா? கம்பெனியின் உரிமைகளையும் ஷேர்களையும் என் அண்ணன் அரவிந்தராஜனுக்கு எழுதிக் கொடுக்கத் தீர்மானித்தேன். தின வாழ்வுக்கு மட்டும் தேவையான மாதாந்திர வருமானத்தைப் பத்திரப்படுத்திக் கொண்டு, வீனஸ் காலனியில் இருக்கும் ஃப்ளாட்டில் குடிபுகுந்தேன். மேசை, நாற்காலி, படுக்கை, புத்தகங்கள், டூத்பிரஷ், மின்விசிறி, உள்ளாடைகள், டவல், நான் அவ்வளவுதான்.

கல்யாணம் ஆகும் வரை சரவணாவிலோ ஏன் கையேந்தி பவனிலோ சாப்பிடலானேன். சுற்றுப்பட்டவர்கள் திகைத்து, 'இது கோவிந்தராஜன் போல இல்லை?' என்று வியப்பதை கவனிக்கவில்லை.

பலமுறை தொலைக்காட்சியில் வந்த பரிச்சய முகம். தினப்படி ஷேவ் கூட மறந்தேன்.

வாரத்தில் எட்டுநாள் பார்க் ஷெராட்டனிலும் கோரமாண்டலிலும் பீச் அருகிலும் பார்ட்டிகளில் கழுத்தைத் திருகிப் பொங்க வைத்த ஷாம்பேன் பாட்டில்கள், நுனிநாக்கு ஆங்கிலம் பேசும் மனைவிகள், ஜப்பானிய, அமெரிக்க, ஆஸ்திரேலிய, இஸ்ரேலிய கொலாபரேட்டர்கள், ஹோசூரில் ஃபாக்டரி அகமதாபாத் அருகே பிவாண்டியில், ராஜஸ்தானில் என்று நாடு முழுக்க ப்ரைவேட் ஜெட்டிலும் ஹெலிகாப்டர்களிலும் சென்று போர்டு கூட்டங்களின் சாதுர்யமான சதிப் பேச்சுக்கள்; டிவிடெண்ட், இன்கம்டாக்ஸ் தகிடுதத்தங்கள், மார்க்கெட்டில் விழும் எழும் ஷேர் மதிப்புக்கள், இந்த 'நடக்கும்போதே ஓடும்' வாழ்க்கையைத் துறந்து எல்லா ஏர்லைன்களிலும் பொன் அட்டைப் பயணி. எக்ஸிக்யூட்டிவ் வகுப்பில் பொம்மைப் புன்னகை பெண்களால் பராமரிக்கப்படுவதை விட்டு, கொலம்பியன் காஃபியிலிருந்து ஜப்பானிய சாங்காவரை நூறு வகை பானங்களை சுவைத்ததை மறந்து....

இந்தப் பந்தயத்தை விட்டு விலக்கி விட்டு, மீண்டும் விசுவநாதனைப் போய்ப் பார்த்தேன்.

"நீங்க சொன்ன மாதிரியே எல்லாத்தையும் விட்டுட்டேங்க."

"எதெதை விட்டீங்க?"

"ஒரு பட்டியலே இருக்குங்க. விட்டப்புறம் தான் தெரியுது, எத்தனை சந்தோஷம் எதிர்பார்ப்பிலயும் லேசான ஏழ்மையிலயும் இருக்குதுன்னு!"

எல்லாவற்றையும் மௌனமாகப் புன்னகையுடன் கேட்டிருந்து விட்டு,

"தம்பி உங்களைப் போல உத்தமமான மனு

சரை நான் பார்த்ததில்லை. நீங்க செய்ததுதான் தியாகம். எம் பொண்ணுமேல உண்மையான அன்பு இருக்குதுன்னு அர்த்தம். மாசம் ரெண்டாயிரம் ரூபாய் போதும். ஒரு டேபிள் பேன் போதும். நாலஞ்சு பாத்திரங்கள் போதும். நம்ம வேலையை நாம செய்துக்கணும். காந்தி என்ன சொன்னார்..."

நான் குறுக்கிட்டு "பத்மாவை பார்க்கணுங்க" என்றேன்.

"தாராளமா!" என்றார். "அவளை பீச்சுக்கு எங்கயாவது அழைச்சுப் போங்க. போய் உங்க எதிர்காலத்தைப் பத்திப் பேசுங்க. கல்யாணத்தை திருநீர்மலையில் சிம்பிளா வெச்சுக்கலாம். என்ன மொத்தம் நூறு ரூபா செலவு. அதுக்கு மேல் கிடையாது!"

"பத்மா!"

நான் போகும்போது கேட்டார், "இப்ப தெரியுதா புதுக்காத்தை சுவாசிக்கிற ஆனந்தம்?"

"ஆமாங்க. இறக்கை முளைச்சாப்பல இருக்குது."

பத்மாவை ஆட்டோரிக்ஷாவில் அழைத்துச் சென்றேன். வாழ்க்கையில் இதுவரை இந்த வாகனத்தில் கால் வைத்ததில்லை. எலும்பெல்லாம் குலுங்குவது ஒரு புது அனுபவமாக இருந்தது. மணற்பரப்பில் நடந்தோம். மௌனமாக வந்தாள்.

"பத்மா, உனக்காக எல்லாத்தையும் விட்டுக் கொடுத்துட்டேன்..."

"எனக்காக இல்லை. எங்கப்பாவுக்காகன்னு சொல்லுங்க..."

"நான் பண்ணியிருக்கிற தியாகத்தினுடைய முழுப் பரிமாணமும் புரியுதா பத்மா? பத்மா ஏன் அழறே? அது ஒண்ணும் பெரிய விஷயமில்லை பத்மா."

"சொத்தையெல்லாம் எழுதிக் கொடுத்துட்டீங்களா?"

நான் கொடுத்த கைக்குட்டையை மறுத்தாள்.

"ஆமா."

"அதைத் திரும்பப் பெற முடியாதா?"

"ஏன்?"

பத்மா கோபமாக என்னை நிமிர்ந்து பார்த்தாள். அவள் கண்களில் கண்ணீர் திரண்டிருந்தது.

"எங்கப்பாவைத்தான் கேட்டீங்க. என்னைக் கேட்டீங்களா? இத்தனை நாள் அவரையும் அவருடைய ரமண மகரிஷி உபதேசங்களையும் சகிச்சுக்கிட்டு இருந்திருக்கேன். பணம் இல்லாம இந்த உலகத்தில என்னங்க செய்ய முடியும்? நடைமுறைக்கு ஒவ்வாத பிலாசபி!"



"ஏம்ப்பா ராப்பிச்சை, எங்கே கொஞ்ச நாளா உன்னை ஆளேயே காணோமே?"
"உடம்பு சொகமில்லாம ஒரு வாரம் 'அப்போலோ'வுல இருந்தேன் தாயி!"
— வி. ரெங்கநாதன்

"உங்கப்பாதான் வேண்டாம்னு."

"அவருக்கு மேல வர இஷ்டமில்லை. எனக்குக் கீழ இருக்க இஷ்டமில்லை. எத்தனை நாள் ரெண்டு புடைவையையே இஸ்திரி போட்டு கட்டிக்கிட்டு கெரசின் ஸ்டவ்வில தோசை சுட்டுக்கிட்டு, பஸ்ல இடிபட்டு ஆட்டோவில அடிபட்டு கார்ல போறவங்களைப் பார்த்து ஏங்கிட்டு இருப்பேன்? ஒருநா எனக்கும் கார்ல போற ஆசை இருக்காதா? அதை விசாரிக்காம இப்படி குடுகுடுன்னு போனான் குடுமியை சிரைச்சான்னு..."

"என்ன சொல்ற பத்மா?"

"உங்களை நான் கல்யாணம் செய்துக்கறேன். ஆனா ஒரு கண்டிஷன். மறுநாளே உங்க பழைய வாழ்க்கைக்குத் திரும்பணும் நீங்க."

"சுக துக்கங்கள பகிர்ந்துக்கறதுதானே கல்யாணம்ங்கறது!"

"அபத்தம்! துக்கத்தை எதுக்குப் பகிர்ந்துக்கணும்? நீட்ஷே படிப்பீங்களா?"

"நீ படிப்பியா?" என்றேன் ஆச்சரியத்துடன்.

"Shared joys make a friend not shared sufferingsனு சொல்லிருக்கார். அண்ணனுக்கு எழுதிக் கொடுத்தது எல்லாத்தையும் திருப்பி வாங்குங்க."

"உங்கப்பா?"

"ஏங்க, நீங்க எங்கப்பாவையா கல்யாணம் செய்துக்கப் போறீங்க?"

திருநீர்மலையில் நூறு ரூபாய் செலவில் எங்கள் கல்யாணம் நடந்தது.

அதன்பின் சோளா ஷெராட்டனில் மிகப் பெரிய ரிசப்ஷன்.

"ஆண்ட்டீ..." என்ற குழந்தையழைப்புடன் கதவு தள்ளித் திறக்கப்பட்டது. திரும்பிப் பார்த்தேன். இவள் எழுந்து போகும்போது படிக்கட்டில் அவள்.

"வாம்மா!" என்றேன் எழுந்து.

"எப்படி இருக்கீங்கணா?" கண்ணாடி வளையல்களின் குலுங்கலுடன் மெல்லிய புன்னகை.

"இருக்கோம்."



# நம்பிக்கை

**ஷாராஜ்**

ஒருவர் கையை ஒருவர் பற்றியவாறே உள்ளே வந்தனர் இருவரும். வினுவை, இடுப்பில் வைத்துக் கொஞ்சிக் கொண்டே வந்தாள் வைஜயந்தி. அவனைக் கன்னத்தில் கிள்ளினேன். முகத்தை வைஜயந்தியின் தோளில் பதித்துக் கொண்டான்.

"ரொம்ப பிஸியோ?" லலிதா வந்த வேகத்தில் அப்படியே ஸ்டூலை விலக்கி படுக்கை அறை வரை சென்று பார்த்தாள். "அம்மா இல்லீங்களாணா?"

"சங்கர் வீட்டுக்குப் போயிருக்காங்க..." என்றதைக் காதில் வாங்கினாளோ என்னவோ. திரும்பி பின் கட்டுக்குத் திறந்த கதவு வரை சென்றாள். அங்கேயும், வருகிறபோதே சமையலறையையும் எட்டி ஒரு பார்வை.

"ஸ்ரீநிதியக் காணோம்?"

"வெளையாடப் போயிருப்பா!" என்றாள் வைஜயந்தி.

வினுவை மறுபடி கிள்ளப் போக 'ம்ம்...' என்றபடியே சிணுங்கல் காட்டினான். விட்டு விட்டேன். அவனுக்கு இந்த கிள்ளுகிற அங்கிளைப் பிடிக்காது.

என் 'பிஸி'யைக் கொஞ்சம் நிறுத்தி வைத்தபடி திரும்பவும் உட்கார்ந்தேன். அறைகளில் அடைசலாகக் கிடக்கின்றன என்று ஒழுங்கு பண்ணும் முனைப்பில் இன்றைய பொழுது. அது என்னவென்றால் நாற்காலிகள், ஸ்டூல், டேபிள், நாடாக் கட்டில், புத்தகங்கள் வைக்கிற அலமாரி என எல்லாம் இங்கே வந்து மாட்டிக் கொண்டிருக்கின்றன.

ஸ்டூல் மீது ஸ்ரீநிதியின் பாடப் புத்தகங்கள். கட்டில் மீது துவைக்கச் சொல்லி நான் கொடியில் போட்டிருந்த பேண்ட், சட்டைகள். பொருள் இடமாறுதல்கள் எத்தனை கண்டித்தும் தவிர்க்க முடியாதனவாகி விட்டன இந்த வீட்டில்.

வேளை பார்த்து இவளும் வந்தாளே.

அவற்றைச் சரிப்படுத்த எத்தனித்தேன். அதற்குள் கட்டில் துணிகளைத் தள்ளி வைத்து விட்டு லலிதா அதில் உட்கார்ந்து கொண்டாள். பஸ் ஸ்டாப்பிலிருந்து நடந்து வந்த அசதியாக இருக்கலாம். கைகளைக் கட்டில் விளிம்புகளில் ஊன்றிக் கொண்டு ஆசுவாசப் பட்டாள்.

மாதம் ஒருமுறையாவது இங்கே வந்து போகிறவள் அவள். சிறிது நேரமாவது தங்கியிருந்து எல்லோரையும் பார்த்து விட்டுப் போனால்தான் அவளுக்குத் திருப்தி.

அவளுக்குத் தன்னுடையவர்களாக உணரத்தக்க மனிதர்களை வேண்டியிருக்கிறது. இல்லாவிட்டால் சிவானந்தா காலனியிலிருந்து மெனக்கெட்டு பாப்பநாய்க்கன்பாளையத்துக்கு வருவாளா?

"உங்க வீட்ல இருக்கும்போது எங்க அண்ணங்களோடவே இருக்கறாப்லத் தோணுது..." என்பாள் அவளே.

லலிதாவுக்கு என்னை மாதிரி சின்ன அண்ணனும் சங்கர் மாதிரி பெரிய அண்ணனும் உடன் பிறந்தவர்கள். இதுவரை சங்கரை நேரில் பார்க்க அவளுக்கு நேரவில்லை. போட்டோவில் பார்த்துவிட்டு இப்படிச் சொன்னாள். மேலும் அவளுக்குக் கீழே உள்ள தங்கையை உருவகப்படுத்தும்-படியான ஒரு தங்கை எனக்கில்லை.

சராசரியான வேளை எனில் வந்ததற்கு இந்நேரம் இப்படி சும்மா இருக்க மாட்டாள். குடும்பத்தின் எல்லா அங்கத்தினர்களையும் முதலில் சம்பிரதாயமாகப் பார்த்துப் பேசி விட்டு, பிறகு யாராவதுடன் உட்கார்ந்து விடுவாள். அம்மாவுடன் சற்று நேரம். அவளின் உடல் நலம் பற்றி கேட்க ஆரம்பித்து, எங்காவது போய் நிற்கும். அடுத்து வைஜயந்தியுடன். பேச்சோடு கூடவே சின்னச் சின்ன ஒத்தாசைகள். சமையலுக்குக் காய்கறி அரிய; அரிசிகளைய; துவைக்கிறபோது என்றால் துணி அலசிக் கொடுக்க என்பதாய்.

நான்கு வயது வினுவையும் சமாளித்துக் கொண்டு, இவற்றை அவள் செய்ய வேண்டியிருக்கும். இப்போது அவன் வைஜயந்தியின் இடுப்பை நழுவித் திமிறிக் கீழிறங்கினான். நேராகத் தனது அம்மாவிடம் ஒண்டுதல்.

ஸ்ரீநிதி இருந்தால் இந்த வினு நன்றாக அவளிடம் ஒட்டிக் கொள்வான். அவளுக்கும் குழந்தைகள் என்றால் மிகப் பிரியம்.

உட்கார்ந்த இடத்திலிருந்து லலிதாவைப்

பார்க்க, வயிறு முன்னிலும் மேடிட்டிருப்பது பக்கவாட்டில் தெரிந்தது. கர்ப்பிணிப் பெண்களுக்கேயான தனிக் களை, உடம்பின் மாற்றங்கள் மனதுக்கும், மனதின் பூரிப்பு உடம்புக்குமாக. ரெண்டும் ஒன்றுதானோ எனும் படியாகவும் முகத்தில் பொலிவு.

இப்படி எதிலாவது மனதைப் பூரித்துக் கொண்டால் உண்டு. மற்றபடி சலிக்கும் படியாகவே வாழ்க்கையும் சகித்துக் கொண்டு போகும்படியாகவே கணவனும் அமைந்தது வெளித் தெரியாத அவளின் உள் ரணங்கள்.

"கொழந்தை பொறந்ததுன்னா மாறிடுவாருங்ண்ணா"- வெகு நிச்சயத்துடன் இதே போன்ற முதல் கர்ப்ப காலத்தில் லலிதா சொன்னது ஞாபகமிருக்கிறது.

வினு பிறந்தும் அவன் மாறவில்லை. அது கூட பிற்பாடு. அவன் பிறந்த உடனே லலிதாவைப் போய்ப் பார்க்கவில்லை என்பதில்தான் அவளுக்கு வருத்தம்.

"வீட்ல எல்லாருமே சந்தேகப்பட்டுக் கேக்கறாங்க வைஜயந்தி. இதுவரைக்கும், அவர் என்னை சந்தோஷமா வெச்சுக்கறாருன்னு தான் சொல்லிட்டிருந்தேன் அவங்ககிட்ட. இப்ப இப்படி ஆயிடுச்சு..." என்றாளாம் இவளிடம்.

ஆரம்பத்திலேயே எங்களுக்கும், பிற்பாடு அவர்களின் சுற்றத்தாருக்குமாகத் தெரியவந்த விஷயம், இவ்விதமாய் இப்போது உறவுகளிடையேயும் அம்பலம்.

"பாபு எப்படியிருக்கார் லலிதா?"

"அவருக்கென்ன!"

அழைத்து வந்திருக்கலாமே என்றோ, வரச் சொல் என்றோ சொல்ல முடியாத நிலை. அவன் வர மாட்டான் என்பதல்ல. இவளுடன் சேர்ந்து வர மாட்டான். நாங்கள் அவர்கள் வீட்டுக்குப் போயிருந்தபோது அழைத்ததில் ஒரு தடவை சேர்ந்து வந்திருந்தனர். பிறகு அவள் மட்டுமே வருகிறாள். அவன் தடுப்பதில்லை.

வினு கட்டிலுக்குக் கீழே நின்றவன் அதன் நாடாக்களின் இடைவெளியை விரல்களால் அதிகப்படுத்திக் கொண்டிருந்தான். அவனை கவனித்ததில், லலிதா தனது கையில் அதை எடுத்ததைப் பார்க்கத் தவறிவிட்டது. மேல் பாகத்தில் இள நீல நிறமும், அடிப் பாகத்தில் கருநீல நிறமும் கொண்ட இறகு. இளநீலம்தான் பாதிக்கும் கூடுதலாக.

"அட, இதென்ன?" என்றாள் பக்கத்தில் வந்து நின்ற வைஜயந்தி.

"வழில கெடந்துது. பாக்க அழகா இருந்துதா, எடுத்து வெச்சுட்டேன்!" - கட்டை விரலுக்கும் ஆட்காட்டி விரலுக்குமிடையில் அதன் காம்பைப் பிடித்து சுற்றிக் கொண்டே ரசித்தாள். சுற்றுதலின்போது வெளிச்சப் பிரதிபலிப்பில் கருநீலம் சற்றே ஊதா நிறமாகவும் மின்னியது.



**அருள்வாக்கு**

ஈச்வர பக்தியாகட்டும், குருவிடம் விநயமாகட்டும் இவை எதற்கு என்றால் படிக்கிறவனின் அஹங்காரத்தை அடக்குவதற்குத்தான். அஹங்காரம் போகாத வெறும் படிப்பு ஆபத்தைத்தான் உண்டாக்கும். மதாநுஷ்டானம், ஈச்வர பக்தி, குரு ஸேவை ஆகியவற்றுடன் கூடிய ஸரீ

"வைஜயந்தி..." வெண்கலக்குரல் கொடுத்த படியே தரை தேய்த்து வருவது வேறு யாராக இருக்கும். சாட்சாத் பார்வதியம்மாள் தான். 'கே.பி.எஸ்.' என்பது இங்கத்தியவர்கள் சூட்டியது.

லலிதா வரும்போதே பார்த்திருக்கலாம். அல்லது பேச்சுக் கேட்டு மூக்கு வியர்த்திருக்கும்.

"கல்கி வந்துருச்சா?" என்பது சாக்கு. "அட், நீ எப்ப வந்தே?" என லலிதாவைக் கேட்டது அபாரமான நடிப்பு. "முருகா..." என்றவாறே அவளுக்குப் பக்கமாக அமர்ந்து கொண்டாள். மிகையான கனத்தில் நாடாக்கள் குழிந்தன. லேசான கிரீச்சிடல்.

வைஜயந்தி, கல்கியைத் தேடி, அலமாரிக்கும் சுவருக்குமான இடைவெளியில் அட்டை மடங்கிக் கிடந்ததை எடுத்துக் கொடுத்தாள். பிறகும் லலிதாவிடம பேச்சுக் கொடுத்துக் கொண்டிருந்தாள் பார்வதியம்மாள்.

அவள், "பொம்மைக் குருவியோட றெக்கை எங்க கெடச்சுது உனக்கு?" என்றதில்தான் அந்த இறக்கைக்குரிய பறவையின் பெயரை அறிந்தேன். தவிட்டுக்குருவி என்றும் சொல்வார்களாம் அதை. இந்த நிறத்துடன் ஒரு பறவையையும் இங்கே நான் பார்த்த நினைவில்லை.

இப்படி ஒரு சிறகு வழியில் எப்போதேனும் தட்டுப்பட்டிருந்தாலும் எனக்கு எடுத்துப் பார்க்கவோ, வைத்துக் கொள்ளவோ தோன்றியிருக்காது. சற்று நின்று ரசித்திருப்பேனா என்பதும் சந்தேகம்.

அதென்னவோ லலிதாவுக்கு இவ்வித ரசனைகள் இருக்கின்றன. அதனாலேயே அவளுக்கென்று இது போல தட்டுப்படுகின்றனவாயிருக்கும்.

ரொம்பச் சாதாரணமானவைதான். ரசிக்கும்போது அதற்கென்று அழகு வந்து விடுகிறது.

யான கல்வி, ஒருத்தனுக்கு இயற்கையாக உள்ள அஹங்காரத்தை தேய்த்து அகற்றி சுத்தப்படுத்தும்; மாறாக இவை இல்லாவிட்டாலோ அதே கல்வி, ''நான் எவ்வளவு படிச்சிருக்கேன் பார்த்தியா?'' என்று அஹங்காரத்தை தலைக்கேற்றி விடுகிறது. வித்யாகர்வம் என்றே சொல்வார்கள்.

வெளிப்பார்வைக்கு அநுஷ்டானம், பக்தி, குருஸேவை நன்றாயிருந்தால் போதாது. ''பக்திமானாக, அநுஷ்டாதாவாக இருந்தும், 'தான் வித்வான்' என்கிற தாட்பூட் இருக்கிறதே!'' என்று பிறர் சொல்லும்படி இருப்பவர்களுண்டு. அநேக பண்டிதர்கள் இப்படித்தான் ஆஸ்திகராகப் பார்வைக்கு இருந்து கொண்டும், தான் அறிவாளி, படிப்பாளி என்பதில் அஹங்கரித்தவர்களாயிருக்கிறார்கள். இவர்கள் நிலையில் தம்மை வைத்துக் கொண்டுதான் தாயுமான ஸ்வாமிகள்,

'கல்லாத பேர்களே நல்லவர்கள்
நல்லவர்கள்!'

என்று ஒரு தரத்துக்கு இரண்டு தரமாகச் சொல்லி,

'கற்றும் அறிவில்லாத என் கன்மத்தை என் சொல்கேன்?' என்று புலம்பி வைத்து விட்டுப் போயிருக்கிறார்.

வெளிமட்டத்தில் மட்டுமில்லாமல் உண்மையான உள்ளூறிய பக்தியோடு, ஸமய ஆசரணையோடு, குரு விச்வாஸத்தோடு கல்வி பயின்றால் இப்படி இருக்காது. கல்லாதபேர் பொதுவாக ஓரளவுக்கு நல்லவர்களாயிருக்கிறார்களென்றால், இப்படி உண்மையான அர்த்தத்தில் கற்றவர்களோ மஹாஉத்தமர்களாகவே இருப்பார்கள்.

கல்லாத காட்டுவாஸியை விடப் படித்தவர் அதிகம் தப்பில் போவதற்குக் காரணம் படிப்புமுறை அஹங்காரத்தை அதிகமாக்குவதாயிருப்பதுதான்.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திர சேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.**

ஒருமுறை இவளோடு நானும் சேர்ந்து லலிதாவை வழியனுப்ப பஸ் ஸ்டாப் வரை சென்றோம். பாதையோர வேப்ப மரம் பூத்திருந்தது. லலிதா மெனக் கெட்டு நின்று மண்ணிலிருந்து சில பூக்களை எடுத்துக் கொண்டு வந்தாள்.

''இவளுக்கு வேற வேலையே இல்ல!'' என்றாள் வைஜயந்தி.

''வேப்பம் பூ எதுக்கு?''

''அவகிட்டயே கேளுங்க.''

கேட்காமலே சொன்னாள். அவளுக்கு வேப்பம் பூக்கள் நட்சத்திரங்களை நினைவு படுத்துமாம்-ஒற்றைப் பூவை உள்ளங் கையில் வைத்துப் பார்த்தால் பச்சைக் குழந்தை தாய் மடியில் தூங்குவதையும்.

''எவ்வளவு மென்னையான மனது உன் ஃபிரண்டுக்கு!'' பிற்பாடு வைஜயந்தியிடம் சொன்னதற்கு, ''அப்படிப்பட்டவளுக்கு லைஃப் அமைஞ்சிருக்கறத நெனச்சாத்தாங்க கவலையா இருக்கு.'' என்றாள்.

இதையே அவள் பார்வதியம்மாளிடம் சொல்லியிருக்கிறாள், லலிதாவைப் பற்றின அவளது அபிப்ராயங்கள் மாறக்கூடும் எனக் கருதி. அதற்கவள், ''நான் பட்ட வேதனைய விடவா அவ பட்டறப் போறா?'' என்றாளாம்.

பார்வதியம்மாவைப் பொறுத்தளவு லலிதாவின் பிரச்னை சாதாரணம். ''எங்க காலத்துப் பொம்பளைக புருஷன் எப்படி இருந்தாலும் வெளியில் குறை சொல்ல மாட்டோம்.'' இந்தக் காலத்து லலிதாவும் அப்படித் தானே. தானாக வெளியில் தெரியலானதற்கு அவளா பொறுப்பு?

ராஜன்பாபு மனசால் அவளை நெருங்காமல் வாழ்கிறான் - அவனது விருப்பத்துக்கு மாறாக நடந்த திருமணம் என்பதால். அதற்கும் அவள் என்ன செய்வாள்?

ஆரம்பத்திலிருந்தே பார்வதியம்மாவுக்கு அவளைப் பிடிக்கவில்லை. அதாவது அவள் இங்கே வந்து போவதை.

''புருசன் சரியில்லையாமா. இவ மினுக்கித் தளுக்கிட்டுத் திரிஞ்சா எந்தப் புருசன் சரியா இருப்பான்?''

இது நானிருக்க.

''பாத்து கவனமா நடந்துக்கடீ வைஜயந்தி. சின்ன வயசிலர்ந்து சிநேகிதமாப் பழகுன வங்கறது வேற; இப்ப வேற. அவ தனியா இங்க வர்றதும் போறதும் எனக்கென்னமோ சரியாப் படல, சொல்லிட்டேன். புருசன் சரியில்லன்னு சொல்றவ அவ. உம் புருசனும் சகஜமா அவ கூட பேசறான், பழகறான். உம் மாமியாரும் அப்பப்ப பெரிய மகன் வீட்டுக்குப் போயர்றா. அப்பவும் இவ வரத்தான் செய்யறா. நீ பாட்டுக்கு மாவரைச்சுட்டு வர்றேன், ரேஷனுக்குப் போறேன்னு அவங்கள வீட்ல தனியா விட்டுட்டுக் கௌம்பிடாதே.''

இது வைஜயந்திக்கு ரகசிய உபதேசம்.

அவளாவது என்னிடம் மறைப்பதாவது?

''உனக்கு அந்த பயம் இல்லையா வைஜ்?''

''உங்களை எனக்குத் தெரியாதா?''

''என்ன தெரியும்?''

''ம்...? உங்களை விட உங்களைப் பத்தி எனக்கு நல்லாத் தெரியும்.''

பார்வதியம்மாள் அவள் கணவனிடம்

இப்படி இருந்திருக்க சாத்தியமில்லை.

"அனுபவப்பட்டதுனால சொல்றேன்..." என வைஜயந்தியிடம் குறிப்பிட்டாளே. அவளது கணவன் வேறிடம் போகக் காரணம், அவர்களிடையே நெருக்கமும், நெகிழ்வும், பரஸ்பரம் புரிதலும் வாய்க்காததனால் இருக்கலாம். இன்னொருத்தியிடம் அது அமைந்ததனாலேயே அவளுடன் ஊரை விட்டுப் போகவும் செய்திருக்கலாம்.

போனவர்கள் எங்கே போனார்கள், என்ன ஆனார்கள் என்று தெரியவில்லை. அப்புறம் காலத்தின் நகர்த்தலில் இவள் இங்கே குடி பெயர்ந்ததும் வசதியானதும் தனிக் கதைகள். கணவர் இன்னும் உயிருடன் இருக்கிறாரா என்பது நிச்சயமில்லாதது. அவளின் கலர் புடைவையும் நெற்றிக் குங்குமமும்தான் இருப்பதான பிரமையை மற்றவர்களுக்கு உண்டு பண்ணிக் கொண்டிருக்கிறது.

இந்த நிலையில்தான் அடுத்தவர்களைப் பற்றிய விமர்சனங்களும் தேவையற்ற உபதேசமும். அவள் நம்மிடம் பேசுவதாவது பரவாயில்லை. லலிதாவிடம் எதுவும் பேசி விடக் கூடாதே என்கிற கவலைதான் எனக்கு.

காலையில் துவங்கி, இடையே ஒரு காஃபி, மதிய உணவு என மட்டும் ஓய்வெடுத்துத் தொடர்ந்த ஒழுங்குபடுத்துதலில் களைத்திருந்தேன். முகம் கழுவினால் நன்றாயிருக்கும் என்று பட்டது. எழுந்து பாத்ரூமுக்கு நடந்தேன். முன்னதாக சமையற்கட்டுக்குப் போய் விட்டிருந்தாள் வைஜயந்தி.

முகம் கழுவி வந்தபோது ஸ்ரீநிதி வந்திருந்தாள். வினுவும் அவளும் திண்ணை வெளிக்குப் போயிருந்தனர். வினு தனது யூ.கே.ஜி. ரைம்ஸை ஸ்ரீநிதிக்கு பாடிக் காட்டிக் கொண்டிருந்தான். அதுவும் அபிநயங்களுடன்.

எங்களுக்குத் தேநீரும் வினுவுக்குப் பாலுமாக தம்ளர்களை ட்ரேயில் கொண்டு வந்தாள் வைஜயந்தி. கூடவே ஒரு தட்டில் கேக்.

வினுவுக்கு ஸ்ரீநிதியே கேக்கை ஊட்டி விட்டு, தம்ளரில் பாலைக் குடிக்க வைத்தாள்.

லலிதா கையில் தம்ளருடன் இன்னும் பேசிக் கொண்டிருந்தாள். அதாவது எங்களுக்கு விளங்குகிற பார்வதி அம்மாளின் சூட்சுமமான கேள்விகளுக்குப் பதிலாக.

"நேரமாச்சுங்ண்ணா.. நான் கெளம்பறேன்" என்றாள் என்னிடம், தேநீரைக் குடித்து முடித்ததுமே. தம்ளரை ஸ்டூலின் மீது புத்தகங்களை சற்று நகர்த்திவிட்டு வைத்தாள்.

"சரி லலிதா. பாபுவ விசாரிச்சதா சொல்லு. அவரை நான் ஆஃபீஸ்ல போயிப் பாக்கறேன்."

"எப்பத்தான் ஒழுங்குக்கு வருமோ இதெல்லாம்?" பார்வதியம்மாளின் அங்கலாய்ப்பு. எனக்கு அது பட்டுவிட்டது. லலிதா, ராஜன் பாபுவைப் பற்றியதாகவே எடுத்துக் கொண்டாள்.

"அதெல்லாம் சரியாயிடுவாருங்கம்மா. இந்தக் கொழந்தையும் பொறக்கட்டும். அப்புறம் பாருங்க..."

கட்டில் விளிம்பில் கைகளை ஊன்றியவாறே, நிதானமாக எழுந்தாள். வினுவுக்கு ஸ்ரீநிதி வாயைத் துடைத்துவிட்டதும் அங்கே சென்ற லலிதாவின் விரல்களைப் பற்றிக் கொண்டான்.

வாசலில் போய் வழியனுப்பிவிட்டு வந்தோம். பார்வதியம்மாள் கல்லியும் கையுமாக உள்ளேதானிருந்தாள். அவளுக்குப் பக்கமாக அந்தச் சிறகு இருந்தது. லலிதா மறதியாக விட்டுச் சென்றாளோ! அதை எடுத்துப் பார்த்தேன்.

"பாவம் அந்தப் புள்ள. எப்படித்தான் இன்னும் அவன நம்பிட்டிருக்கறாளோ?" என்பதாகப் பார்வதியம்மாளின் அங்கலாய்ப்பு மாறிவிட்டிருந்தது. இதுவும் எனக்காக. ஆனால் வேறு வகை.

ஒன்றுக்குள் ஒன்றாகக் காலி தம்ளர்களை அடுக்கிக் கொண்டிருந்தாள் வைஜயந்தி. அவளுக்கு என் மீது நம்பிக்கை. அங்கே ராஜன் பாபு லலிதாவைத் தனியே அனுப்புகிறானே, அவனுக்கு அவள் மீது. அப்படியே லலிதாவுக்கு ராஜன்பாபுவிடமும்.

யாருக்கும், யாரிடமாவதும் எதிலாவதும் நம்பிக்கை இருக்கவே செய்யும். பார்வதியம்மாள் நெற்றிக் குங்குமத்தைப் போல.

'இது எந்த நம்பிக்கையில்?'

கேட்க முடியுமா அவளிடம்? முடியும்; ஆனால் கூடாது. நான் அதைச் செய்யவும் மாட்டேன்.



# சேமிப்பை

# முதலீடு செய்யும் முன் சிந்திப்பீர் !

- ☐ முழுமையான பாதுகாப்பு
- ☐ நிறைந்த வருவாய்
- ☐ வருமான வரிச் சலுகை
- ☐ மன நிம்மதி

**எல்லாம் பெற நீங்கள் முழு நம்பிக்கையுடன்**
**முதலீடு செய்ய பொருத்தமான நிறுவனம்**

# பவர்ஃபின்

| முறையான வட்டி வழங்கும் திட்டம் திட்டம் 'அ' (RIPS) | | | திரள்வட்டி வழங்கும் திட்டம் திட்டம் 'ஆ' (CIPS-I) | |
|---|---|---|---|---|
| காலம் | வழங்கப்படவுள்ள ஆண்டு வட்டி விகிதம் | | ரூ. 3000க்கு முதிர்வுத் தொகை | ஒரு ஆண்டிற்குப் பெறக் கூடிய வருவாய் விகிதம் |
| | மாதத்திற்கு | காலாண்டுக்கு | | |
| 12 மாதங்கள் & 1 நாள் | 15% | 15.19% | 3,483/- | 16.06% |
| 25 மாதங்கள் | | | 4,092/- | 17.47% |
| 36 மாதங்கள் | | | 4,692/- | 18.80% |
| 48 மாதங்கள் | | | 5,445/- | 20.38% |
| 60 மாதங்கள் | | | 6,321/- | 22.14% |

* குறைந்த அளவு வைப்புநிதி RIPSக்கு ரூ. 5000/- & CIPS-Iக்கு ரூ.3000/-

மேலும் விவரங்களுக்கும் விண்ணப்பப் படிவங்களுக்கும் கீழ்க்குறிப்பிட்ட முகவரியில் உடனே தொடர்பு கொள்ளலாம்.




**தமிழ்நாடு மின்விசை நிதி மற்றும் அடிப்படை வசதி மேம்பாட்டு நிறுவனம் (பவர்ஃபின்)**

(தமிழ்நாடு அரசு நிறுவனம்)

**பதிவு அலுவலகம் :** எண்.84, டிடிகே. சாலை,
(ஆழ்வார்ப்பேட்டை சிக்னல் அருகில்), ஆழ்வார்ப்பேட்டை,
சென்னை - 600 018. தொலைபேசி : 4997689, 4995648.

DIPR / 190 / DIS / 97

இந்தியன் எக்ஸ்பிரஸ் நாளிதழில் 23.9.96 அன்று ஏற்கெனவே வெளியான எமது விளம்பரத்தைத் தொடர்ந்து வெளியிடப்படுகிறது

# 45 குறையொன்

**ம**ணி சொன்ன மணியான வார்த்தை இதுதான் - நாம் எப்போதும் ஹ்ருதயத்திலே வைத்துக் கொள்ள வேண்டிய வார்த்தை :

"ஹே பிரபு! ஜகன்னாதா! சர்வலோக சரண்யா! தங்களுக்கு நிவேதனம் ஆகிக் கொண்டிருக்கும் போது நான் பக்கத்தில் இருந்து அடிக்காமல் போனால் எனக்கு ஏது பிரயோஜனம்!?"

- பகவான் வெண்ணெய்யை வாயில் போட்டுக் கொண்டதைத்தான் 'நிவேதனம்' என்றது அந்த மணி!

"நான் ஸ்வரூப லாபம் பெற வேண்டாமா? நீங்கள் உண்ணும் நேரம் தேவதைகள் வரவேண்டும்; ராக்ஷஸர்கள் ஓட வேண்டும்; அந்த பிரணவம் த்வனிக்க வேண்டும்... அதனாலேதான் அடித்தேன்."

மணி அடிப்பது கூட பெரியோரிடத்திலே பழகி அடிக்க வேண்டும் என்பது இதன் மூலம் தெரிகிறது. ஒவ்வொருவிதமாக அடிப்பதற்கும் ஒவ்வொரு அர்த்தம் இருக்கிறது.

தூரத்தில் இருப்பவர்கள் கூட, மணி அடிக்கும் விதத்தைக் கொண்டே பகவானுக்கு என்ன நடக்கிறது என்பதைத் தெரிந்து கொள்வார்கள்.

மணி சொன்ன பதிலுக்கு மறு பேச்சு இல்லை பரமாத்மாவி



# ல்லை



டம்! குடுகுடுவென்று அங்கிருந்து ஓட்டம் பிடித்தான். ஊர்க் கடைசியிலே ஒரு வீடு... அந்த வீட்டுக்குள் போய்ப் புகுந்தான்.

எதிர்பாராத சமயத்துலே வந்து நிற்பதுதான் பகவானுடைய குண விசேஷம்! வருவான் என்று நினைக்கும் நேரத்தில் வரமாட்டான்; வரமாட்டான் என இருக்கும்போது வந்து சேருவான்.

அப்படி எதிர்பாராமல் பகவான் நுழைந்த வீடு ததிபாண்டன் என்கிறவனுடைய வீடு. அந்த வீட்டுக்குள்ளே நுழைந்து ஒவ்வொரு பானையாகத் திறந்து பார்க்கிறது குழந்தை. எல்லா பானைகளிலேயும் தயிர் நிரம்பிக் காணப்படுகிறது. கோபிகாஸ்த்ரீகள் குழந்தையைத் துரத்திக் கொண்டு வருகிறார்கள். கடைசியிலே பார்த்தால், ஒரு பானை காலியாக இருக்கிறது!

இந்தக் குழந்தை, அந்தக் காலி பானை மேலே ஏறி, உள்ளே தொப்பென்று குதித்து உட்கார்ந்து கொண்டது.

இதைப் பார்த்துக் கொண்டே இருந்தான் ததிபாண்டன்...

'ஓஹோ! இன்னைக்கு இந்தக் கண்ணனை விடக்கூடாது!' என்று மனத்தில் தீர்மானம் பண்ணிக் கொண்டான். பானை மேலே மூடி போட்ட மாதிரி ஏறி உட்கார்ந்து விட்டான்!

யசோதையும் கோபிகாஸ்த்ரீகளும் அருகே வந்தார்கள். யசோதை கேட்டாள் :

"ததிபாண்டா! என் குழந்தை கிருஷ்ணன் இங்கே வந்தானா...?"

அப்பட்டமான பொய்யை அழகாகச் சொல்கிறான் ததிபாண்டன் :

"உன் குழந்தை கிருஷ்ணனா? இந்தப் பக்கமே வரவில்லையே...! அவனை நான் பார்த்தே ஆறு மாதமாகிறதே!"

பொய் சொன்ன ததிபாண்டனுக்கு மோக்ஷம் கிடைத்தது! உண்மையே பேசிய தசரதனுக்கு நரகப்பிராயமான சுவர்க்கம்தான் கிடைத்தது!

தசரதனைக் காட்டிலும் ததிபாண்டன் உயர்ந்தவன் என்பதைக் காட்டுகிறார்கள் வியாக்யானக்காரர்கள் :

'விகர்மா' என்றால் பொய் சொல்வது. ஆனால் சில நேரத்திலே, பொய் சொல்வதே கர்மாவாக ஆகிவிடுகிறது! இந்திந்த இடத்திலே பொய் சொல்லலாம் என்று சாஸ்திரமே விதித்திருக்கிறது.

உதாரணமாய், விவாக காலத்திலே பொய் சொல்லலாம் என்று இருக்கிறது. விவாக காலம் என்றால் நிச்சயதார்த்தத்திலேயிருந்தே பொய் சொல்லலாம் என்று அனுமதி கிடையாது! அந்தக் கல்யாணம் நடக்கவிருக்கிற கட்டத்திலே அது நின்று போய் விடுமோ என்கிற அபாயம் இருந்தால் சொல்லலாம்.

ஒருத்தன் கையில் கத்தியை எடுத்துக் கொண்டு பசுவை வெட்டித்தள்ள ஓடுகிறான். அந்தப் பசு 'அம்மா' என்றபடி ஆசிரமத்திலே நுழைந்து விட்டது. அங்கேயிருந்த மஹரிஷியைப் பார்த்து, கத்தி ஏந்தியவன் கேட்கிறான் :

"பசு வந்ததா இந்தப் பக்கம்?"

அவர் ரொம்ப கெட்டிக்காரர். பொய் சொல்லாமலேயே தப்பிக்கிறார் :

'கண் பார்க்கும் ஆனால் வாய் பேசாது; வாய் பேசும், ஆனால் கண் பார்க்காது' என்று பதில் சொல்கிறார்.

கொலை செய்ய வந்தவன், 'ஏதோ பைத்தியம் உளறுகிறது' என்று புறப்பட்டுப் போய் விட்டான்.

இப்படி சாமர்த்தியமாய் பேசுவது ஒரு வகை என்றால் ததிபாண்டனோ பொய்யே பேசினான். அவனுக்கு எப்படி மோக்ஷம் கிடைத்தது...?

**சா**மான்ய தர்மம், விசேஷ தர்மம் என்று

முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

இரண்டு வகை சொல்வார்கள். விசேஷ தர்மம் பண்ண வேண்டிய காலம் பக்கத்திலே வந்து விட்டால் சாமான்ய தர்மத்தை விட்டுவிட்டு அந்த விசேஷ தர்மத்தைத்தான் நாம் கடைப் பிடிக்க வேண்டும்.

வீதி புறப்பாடு நடக்கிறது. பகவான் நாலு மணிக்குப் புறப்படுகிறான். வேத கோஷ்டி, எழுந்தருளப் பண்ணக்கூடியவர்கள், பரிசாரகர்கள், அர்ச்சகர்கள் என்று எல்லோரும் அவனை எழுந்தருளப் பண்ணி வந்து கொண்டிருக்கிறார்கள்.

கோயிலுக்குப் போய்ச் சேர எட்டரை மணி ஆகும். ஒரு வீதியிலே பகவான் வந்து கொண்டிருக்கும்போது ஆறேகால் மணி ஆயிற்று...

என்ன சமயம் அது? சந்தியாவந்தனத்துக்கான சமயமல்லவா? உடனே, சுவாமியை, 'இங்கேயே நின்னுகொண்டிரு... நாங்கள் சந்தி பண்ணிவிட்டு வந்து திரும்பவும் எழுந்தருளப் பண்ணுகிறோம்...' என்று சொல்லலாமா? நடுத்தெருவிலே அவனை நிறுத்தி வைத்து விட்டு வரலாமா?

இதற்கு ஒரு வழியிருக்கிறது. பகவானைக் கொண்டு போய் கோவிலில் எழுந்தருளப் பண்ணிய பிறகு, காலாதீத பிராயச்சித்தார்த்தமாக, இன்னொரு அர்க்கியத்தைக் கூடுதலாக விட்டு சந்தியாவந்தனத்தை முடிக்கலாம்.

இப்படியொரு விதிவிலக்கு இருக்கிறதனாலே நித்யம் இதையே பண்ணக்கூடாது! என்றைக்கு முடியாமல் போகிறதோ அன்றைக்கு மட்டும் பண்ணலாம்.

பகவானை எழுந்தருளப் பண்ணுகிற விசேஷ தர்மத்திலே நாம் ஈடுபட்டுக் கொண்டிருக்கும்போது, சந்தியாவந்தனம் என்பது சாமானிய தர்மமாகப் போய்விடுகிறது.

அந்த மாதிரிதான் விசேஷ தர்மத்தை பானைக்குள் இருக்கும் பகவானைக் காத்தலாகிய தர்மத்தைக் காப்பதற்காக, ததிபாண்டன் உண்மை பேசுதல் என்கிற சாமானிய தர்மத்தைக் கைவிட்டான். 'கிருஷ்ணனைப் பார்க்கவேயில்லையே!' என்றான். அவனுக்கு மோக்ஷம் கிடைத்தது.

தசரதன் இருக்கிறானே... அவன் என்ன செய்தான்...? விசேஷ தர்மமாகிய ராமனைக் காட்டுக்கு அனுப்பி, 'கைகேயிக்குக் கொடுத்த வாக்கு' என்கிற சாமான்ய தர்மத்தைக் காத்தான். அவனுக்கு வெறும் சொர்க்கம்தான் கிடைத்தது. ததிபாண்டனுக்கோ மோக்ஷமே கிடைத்தது!

ததிபாண்டன் சொன்ன பொய்யைக் கேட்டு எல்லோரும் புறப்பட்டுப் போய் விட்டார்கள். என்ன ஆச்சரியம் பாருங்கள்! அவர்கள் போன பிற்பாடு, பானைக்குள் இருக்கும் குழந்தை ததிபாண்டனை ஒரு குத்து குத்துகிறது. "எத்தனை நாழி இப்படி உட்கார்ந்திருப்பாய்? எனக்கு மூச்சு வாங்குகிறது...!" என்கிறது குழந்தை!

அதற்கு அவன் சொல்கிறான் :

"ஹே கிருஷ்ணா! உனக்கு இந்தப் பானையிலேயிருந்து மோக்ஷம் வேண்டுமானால் எனக்கு நீ மோக்ஷம் தர வேண்டும்...."

"உனக்கு மோக்ஷமா?"

"ஆமாம். இந்தப் பிறவியாகிற பானையிலேருந்து எனக்கு மோக்ஷம் வேண்டும்..."

இதைக் கேட்டு குழந்தை சொல்கிறது :

"உனக்கு மட்டும் என்னடா மோக்ஷம், அந்தப் பானைக்கும் சேர்த்துக் கொடுப்பேனாக்கும் மோக்ஷம்!"



## திம்மக்காவின் குழந்தைகள்!

பிள்ளைப்பேறு இல்லாத தம்பதியர் குழந்தைகளை தத்து எடுக்க முடிவு செய்தனர். இதில் என்ன புதுமை என்கிறீர்களா? கர்நாடகா நெடுஞ்சாலை எண் 48-ல் 3 கிலோ மீட்டர் தூரம் வரையில் உள்ள 284 மரங்கள்தான் அந்தத் தம்பதியின் தத்துப் பிள்ளைகள்!

திம்மக்கா, அவரது கணவர் பிக்காலு சிக்கையா என்ற தலித் தம்பதி ஹூலிகல் கிராமத்தைச் சேர்ந்தவர்கள். இருவரும் நாற்பது வருடங்களாக மரக்குழந்தைகளை ஊட்டி வளர்த்து வருகின்றனர். தத்து எடுத்த மரங்களை கிராம மக்களின் கோடாரிகளிடமிருந்தும், கிளையை ஒடிக்கும் குழந்தைகளிடமிருந்தும் பரிவோடு திம்மக்கா காப்பாற்றி வருகிறார்.

ஆதாரம் : இந்தியா டுடே
தகவல் : ம. வசந்தா

"பானைக்கும் சேர்த்துக் கொடுப்பாயா...?"

"ஆமாம்!" என்று எழுந்தான் பகவான். சொன்னவுடனே, சொன்ன வண்ணம் செய்யும் பெருமான் அவன். புஷ்பக விமானம் விரைந்து வருகிறது... ததிபாண்டனோடு கூட அந்தப் பானையும் ஏறிக் கொண்டது விமானத்திலே! பானையும் வைகுண்டத்துக்குப் போனது. இப்போதும் நாம் வைகுண்டத்துக்குப் போனால் அந்தப் பானையைப் பார்க்கலாம்!

ஸ்ரீரங்கத்திலே பெருமானுக்கு அர்ச்சனை பண்ணும் பிள்ளைப் பெருமாள் அய்யங்காருக்கு இந்தப் பானை மோக்ஷமடைந்த சரித்திரம் நடையாடுகிறது.

அர்ச்சனைத் தட்டைக் கீழே வைத்து விட்டு, "ரங்கநாதா! எனக்கு மோக்ஷம் கொடேன்..." என்று கேட்கிறார்!

அந்த ரங்கநாதனும் அவரோடு பேசுகிறான். "பிள்ளைப்பெருமாள் அய்யங்காரே... உமக்கு என்ன இன்றைய தினம் மோக்ஷத்திலே அதிக ருசி...?

"இன்றைக்கே போகவேண்டும் போலிருக்கிறதே சுவாமி..." என்கிறார் அவர்.

"அப்படியானால், நீர் என்ன கர்மயோகம் பண்ணியிருக்கிறீரா?" என்று பகவான் கேட்கிறார்.

"தெரியாது..."

"ஞான யோகம் பண்ணியிருக்கிறீரோ?"

"அறவே ஞான சூன்யம் நான்..."

"பக்தி யோகம் பண்ணியிருக்கிறீரா?"

"அந்தப் பக்கமே போனதில்லை..."

"சரணாகதி பண்ணியிருக்கிறீரா...?"

"தெரியாதே!"

"இதெல்லாம் எப்படியாவது போகட்டும்... என் பக்தனுக்கு ஒரு நாளாவது அன்னமிட்டிருக்கிறீரா...?"

"இல்லையே!"

"என் பக்தன் தங்க இடம் கொடுத்திருக்கிறீரா?"

"இல்லையே..."

"என் கதை சொல்கிற இடத்திலே போய்க் கேட்டதுண்டா...?"

"இல்லை!"

"எதற்கெடுத்தாலும் இல்லையே இல்லையே என்கிறீரே...?" என்று ரங்கநாதருக்குக் கோபம் வந்ததாம். படுத்துக் கொண்டிருந்த பெருமாள் எழுந்து உட்கார்ந்தார்.

அப்படி ரங்கநாதர் உட்கார்ந்த கோலத்தில் சேவித்தவர் பிள்ளைப் பெருமாள் அய்யங்கார் மட்டும்தான். நாமெல்லாம் சயனத் திருக் கோலம்தானே பார்த்திருக்கிறோம்!

"என்ன அக்கிரமம்! மோக்ஷத்தை நீர் இவ்வளவு சுலபமாக விரும்புகிறீரே! மோக்ஷம் என்றால் ஏதோ கிள்ளுக்கீரை என நினைத்தீரோ? எதையாவது கேட்டால் 'இல்லையே', 'தெரியாது' என்கிறீர். எதற்காவது 'ஆமாம்', 'பண்ணியுள்ளேன்' என்று பதில் சொன்னால்தானே மோக்ஷம் தரலாம்... ஒன்றுமே பண்ணாத உமக்கு மோக்ஷத்தை எப்படிக் கொடுப்பது.

இதைக் கேட்ட பிள்ளைப்பெருமாள் அய்யங்காருக்குக் கோபம் வந்துவிட்டது! இடுப்பிலே வஸ்திரத்தை இழுத்துக் கட்டிக் கொண்டார். ரங்கநாதரிடம் அச்சமயம் அவர் கேட்ட கேள்வி இருக்கிறதே...?

அந்தக் கேள்வியைக் கேட்டு மீண்டும் படுத்த ரங்கநாதன் படுத்தவன்தான்! இன்று வரைக்கும் அவன் எழுந்திருக்கவேயில்லை!

அப்படியென்ன கேட்டாராம் பிள்ளைப் பெருமாள் அய்யங்கார்...? ஒரு வாரம் பொறுங்கள், சொல்கிறேன்.

(தொடரும்)



## 356-ம் இவர் சாதனையும்!

இந்தியாவில் ஆட்சி செய்த பிரதமர்கள் 356ஐ பிரயோகித்து எத்தனை தடவைகள் மாநில ஆட்சிகளைக் கலைத்தார்கள்?

| | |
|---|---|
| 1. ஜவஹர்லால் நேரு | 7 |
| 2. லால்பகதூர் சாஸ்திரி | 2 |
| 3. இந்திராகாந்தி | 48 |
| 4. மொரார்ஜிதேசாய் மற்றும் சரண்சிங் | 16 |
| 5. ராஜீவ்காந்தி | 6 |
| 6. வி.பி. சிங் | 2 |
| 7. சந்திரசேகர் | 4 |
| 8. நரசிம்மராவ் | 11 |
| 9. தேவேகௌடா | 2 |
| மொத்தம் | 98 |

நன்றி : ஹிந்து

தகவல் : ஸ்ரீரங்கம் ரா. ராகவன்

தவளைகளுக்கு மயக்கமருந்து கொடுத்து 'ஏற்றுமதி' செய்தபோது வருந்தினோம்! யானைகளைக் கொன்று தந்தங்களை வெளி நாடுகளுக்கு அனுப்பியபோது குமுறினோம்! ஒட்டகப் பந்தயங்களுக்கென்று சிறுவர்களை வேற்று தேசத்துக்குத் தாரை வார்த்தபோது வேதனைப்பட்டோம். இவற்றை எல்லாம் தூக்கிச் சாப்பிடும் விதத்தில் இதோ... நம்மைத் தலைகுனியவைக்கும் ஒரு "ஏற்றுமதி" அண்மையில்

# வளைகுடா நாடுகளுக்குப் பயணம்: வேலைக்கு அல்ல; பிச்சை எடுக்க!



நிகழ்ந்திருக்கிறது!

சரக்கு சரியில்லை என்றால் சில சமயம் 'ரிஜெக்ட்' ஆகிவிடுமே, அது போல், திருப்பி அனுப்பப்பட்ட பிறகுதான், இந்த "சரக்கை"ப் பற்றிய விவரங்கள் ஒன்றன் பின் ஒன்றாக வெளிவந்து நம்மைத் தலை நிமிர முடியாமல் அடித்திருக்கின்றன!

ஏற்றுமதி செய்யப்பட்டவை 8–14 வயதுக்குட்பட்ட குழந்தைகள்; ஆண்- பெண் என்ற பாரபட்சமில்லாமல், அரபுநாடுகளுக்கு அனுப்பி வைக்கப்பட்டிருக்கின்றனர்! ஜனவரியிலும், பிப்ரவரியிலும் 'செட்டு' 'செட்டாக' இவர்கள் திரும்பி வந்த பிறகுதான், இதுவரை இருட்டடிக்கப்பட்டிருந்த பல உண்மைகள், வெளிச்சத்துக்கு வந்திருக்கின்றன!

இந்த அவலத்தை முழுவதுமாகப் புரிந்து கொள்ள, இதன் பின்னணியை அலச வேண்டும் :

அரபுநாடுகளின் செல்வச் செழிப்பு உலகப் பிரசித்தம்; 'ரம்ஜான்' கொண்டாடப்படும் ரமலான் மாதத்தில், அங்குள்ளவர்களுக்கு, 'தானம்' கொடுக்கும் உணர்வு அதிகமாகும். இந்த மாதத்தில் தானம் செய்வதால் அல்லாவின் அருள் அபரிமிதமாகும் என்கிற ஐதீகம் ஒரு காரணம்; கொடுப்பது பன்மடங்காகத் திரும்பக் கிடைக்கும் என்ற நம்பிக்கை இன்னொரு காரணம்! அதனால் யாரும், ஐந்நூறு ரூபாய்க்குக் குறைவாக (ஒரே முறையில்) கொடுப்பதே இல்லையாம்! அந்த மாதம் முழுதுமே ஈகைக்கு



முக்கியத்துவமென்பதால், ஒரு நாளில் ஒருமுறை ஒருவர் தானம் செய்தாலும், ஒரு மாதத்தில் குறைந்தபட்சம் ரூ 15,000 செல வழிப்பார்!

ஆனால், அங்கேயோ பிச்சைக்காரர்களே கிடையாது! பின் யாருக்கு தானம் கொடுப்பது? வறுமைக் கோட்டிற்குக் கீழ்வாழும் பிறநாட்டுச் சகோதரர்கள் பேரில் அவர்களின் பார்வை திரும்புகிறது.

இந்தியாவில், முக்கியமாக மே. வங்காளம், உ.பி., பீஹார், மற்றும் மும்பையிலுள்ள தாராவி ஜோகேஸ்வரி போன்ற இடங்களில் வசிக்கும் ஏழை முகமதியர்கள், இந்த 'பிச்சைக்காரப் பிழைப்பிற்கு'த் தயாராகின்றனர்.

சவுதியில் பிச்சைக்காரர்களுக்கு 'டிமாண்டு' எக்கச்சக்கமென்பதால், மும்பை யில் பல இடைத்தரகர்களும் டிராவல் ஏஜெண்டுகளும் இந்தப் பிச்சைக்கார ஏற்று மதியை ஒரு 'பிசினஸ்'ாகவே செய்து வரு கிறார்கள்.

இது தவிர வருடா வருடம் 'ஹஜ்' 'உம்ரா' போன்ற யாத்திரைகளில் பங்கெடுத்துக் கொள் ளும் இந்தியர்களில், சுமார் 2000 பேராவது திரும்புவதேயில்லை! இவர்களில் பலர், தம் குழந்தைகளுடன் செல்லும் இளவயது தம்பதி யினர். இந்தக் குழந்தைகளை எல்லாம் அங்கே பிச்சை எடுக்க விட்டு விடுவார்கள்! தப்பித் தவறி பெற்றோர் 'பிடிபட்டு', இந்தியாவுக்குத் திருப்பி அனுப்பப்பட்டாலும், இவர்கள் தங் களுக்குக் குழந்தைகள் இருப்பதாகக் காட்டிக் கொள்ளவே மாட்டார்கள்! இங்கே வறுமை யில் வாடுவதைக் காட்டிலும், அங்கே பணக் காரப் பிச்சைக்காரர்களாக இருந்து விட்டுப் போகட்டுமே என்ற பரிதாபகரமான ஏக்கம் தான் காரணம்!

Indian Personal Export Promotion Council ஐச் சார்ந்த சுபோத் நவல்கர் வெளியிட்டிருக்கும் தகவல்கள் அதிர்ச்சியூட்டுகின்றன!

சென்ற ஆண்டில், ஒரு பணக்கார சவூதி ஷேக், இந்தியாவிலிருந்து ஆயிரம் ஏழை முஸ்லிம்களை, தம் சொந்தச் செலவில் சவூதி அரேபியாவிற்கு ரமலான் மாதத்தில் அழைத் துச் செல்லத் திட்டமிட்டிருக்கிறார். டிராவல் ஏஜெண்டை அணுகி, முன்பணமும் கொடுத் துள்ளார். அவர்கள் தேர்வு செய்யும் நபர்கள், தலைமழிக்கப்பட்ட ஏழை முஸ்லிம்களாக,

# "இஸ்லாம், பிச்சைக்காரரர்களை உருவாக்குவதில்லை!"

பிச்சைக்காரர்கள் உருவாக்கப்படுவதை இஸ்லாம் அங்கீகரிக்கவில்லை. வறுமைக் கோட்டிற்குக் கீழே இருப்பவர்களை வாழ்வில் வளமுடையவர்களாக மாற்றுவதற்காக உருவாக்கப்பட்டதே 'ஜகாத்' எனும் கடமை. இக்கடமையின்படி செல்வம் உடையவர்கள் தங்கள் ஆண்டு சேமிப்பில் இரண்டரை சதவிகிதத்தை ஏழைகளுக்கு அளிக்க வேண்டும். இதனை தனியாக அளிப்பதை விட, செல்வந்தர்கள் ஒரு நிதியகத்தை (பைத்துல் மால்) அமைத்து, அதன் மூலம் கணிசமான தொகையை ஒவ்வொருவருக்கும் அளிப்பதைத்தான் இஸ்லாம் சிறப்பிற்குரிய செயலாகக் கருதுகின்றது. கவுரவமான முறையில் தர்மம் வழங்கப்படுவதையே இஸ்லாம் விரும்புகிறது. வலது கை கொடுப்பதை இடது கைக்குத் தெரியாத வகையில் அளிப்பதையே இஸ்லாம் சிறப்பித்துக் கூறுகின்றது.

இந்தப் பின்னணியில், அரபு ஷேக்குகள், பிச்சையளிப்பதற்காக இங்கிருந்து ஏழைச் சிறுவர்களை கடத்தி செல்கின்றார்கள் என்று கூறுவது தவறானதும், உண்மைக்கு மாறானதுமாகும். இஸ்லாமியச் சட்டங்களை கடுமையாகக் கடைப்பிடிக்கும் சவூதி அரசாங்கம் இந்த தரங்கெட்ட செயலை ஒருபோதும் அனுமதிப்பதில்லை. மேலும் சவூதியில் பிச்சைக்காரர்கள் குறைவாக இருப்பதால், அரசாங்கமே மக்கள், தானம் வழங்குவதற்காக International Islamic Relief Agency (சர்வதேச இஸ்லாமிய நிவாரண அமைப்பு) போன்ற அமைப்புகளை உருவாக்கியிருக்கின்றது. தானம் வழங்க விரும்பும் சவூதி நாட்டவர்கள் அங்குள்ள வங்கிகளில் இந்த அமைப்புகள் பேரில் தானம் வழங்குகின்றனர். இந்த அமைப்புகள் உலகின் பல்வேறு பகுதிகளில் வறுமையில் உழலும் மக்களுக்கு உணவுப் பொருட்கள், மருத்துவ பொருட்கள்,

உடல் ஊன முற்றவர்களாக இருக்க வேண்டுமென்றும், ஏழைகளிடமிருந்து ஏஜெண்டுகள் எந்தவித பண வசூலும் செய்யக் கூடாது என்றும் நிபந்தனை விதித்திருக்கிறார்.

ஒரு மாதம் கழித்து அவர் திரும்பிய போது, 10,000 பிச்சைக்காரர்கள், அவருடன் செல்லத் தயாராக நின்றனர்! அவர்களில் பலர், 'கல்யாணி'ல் உள்ள ''ஹாலி மலாங்''கிற்குச் சென்று, கையைக் காலை வெட்டிக் கொண்டு, பலவந்தமாக ஊனப்படுத்திக் கொண்டவர்களாம்! போதாக்குறைக்கு, ஏஜெண்டுக்கு நிறைய 'தண்டம்' வேறு அழுதிருக்கிறார்கள்! இதை எல்லாம் கேள்விப்பட்ட ஷேக், மிகவும் நொந்து போய் விரக்தியுடன் தம் திட்டத்தையே கைவிட்டு விட்டாராம்!

இப்படி எல்லாம் பிச்சை பெறுவதற்காக ஏற்றுமதி செய்யப்படுபவர்கள், 'ரம்ஜான்' முடிந்த பிறகு என்ன செய்கிறார்கள்? பெரியவர்கள் என்றால் வீட்டு வேலை, சிறியவர்கள் என்றால் ஷூ பாலீஷ், கார் துடைப்பது, ஒட்டக மேய்ப்பு என கிடைத்த வேலையைச் செய்கிறார்கள்.

ஈகை மாதம் முடிந்தபின் பலருக்கு மனத்தில் ஈரமும் வற்றிவிடும்! இந்தக் குழந்தைகளைப் படாதபாடுபடுத்துவார்கள்; பல சமயங்களில் போலீசிடம் அகப்பட்டு, சவூதி ஜெயிலில் அடைபட்டு வருந்திருக்கின்றனர்! தொல்லை தாங்கவில்லை என்றால் அவர்களே திருப்பி அனுப்பி விடுகின்றனர்!

சென்ற ஆண்டுகளில் இப்படித் திரும்பியுள்ளவர்கள் ஏராளம்! இந்த ஜனவரியில் 76 பெண்களும், பிப்ரவரியில் 47 பையன்களும் மும்பைக்கு திருப்பப்பட்டிருக்கிறார்கள். இவர்கள் மும்பையிலுள்ள Juvenile Welfare Board இடம் ஒப்படைக்கப்பட்டு, உமர்காடியிலும், மன்கூர்டிலுமுள்ள ''ரிமாண்டு ஹோம்''களில் வைக்கப்பட்டிருந்தார்கள். ஏற்கெனவே 'ஹவுஸ்ஃபுல்'லாக இருக்கும் 'ஹோம்'களிலும் இவர்கள் வேண்டாத விருந்தினர்கள்தாம்! மேற்கு வங்கத்தில் உள்ள முர்ஷிதாபாத்தைச் சேர்ந்த இவர்களைக் காவல் துறையினர் சொந்த ஊருக்குத் திருப்பியனுப்ப முயன்று வருகிறார்கள்.

எல்லோருக்கும் வீட்டுக்குப் போக ஆசைதான்! அப்பா அம்மாவுடன் 'ஹஜ்', 'உம்ரா' யாத்திரைகளுக்குச் சென்றதாகவும்,

ரொக்கம் என்று பல வகையில் பகிர்ந்தளிக்கின்றனர். எனவே 'பத்தாயிரம் சிறுவர்களை ஒரு அரபு ஷேக் கடத்த விருந்தாராம். கடத்த முடியவில்லையாம்'' என்றெல்லாம் கூறப்படுவது முற்றிலும் கற்பனையாகும்.

இங்கிருந்து ஏழைகளைக் கடத்திச் சென்று அவர்களை அவமானப்படுத்தும் வகையில் தர்மம் செய்யுமாறு இஸ்லாம் வழிகாட்ட வில்லை. சில பணப்பிசாசு முகவர்கள் எவ்வாறு சமீபத்தில் வேலை தேடி ஐரோப்பிய பயணம் மேற்கொண்ட இந்தியர்களை நடுக்கடலில்– மால்டா அருகே தத்தளிக்க விட்டார்களோ, அதே போல் அரபு நாட்டில் வேலை வாய்ப்பு என்று சொல்லி நம் நாட்டுச் சிறுவர் சிறுமியரின் வாழ்வைப் பாழ்ப்படுத்தியுள்ளனர். உழைப்பவர்களின் கைகளை முத்தமிட்டு, உழைப்பின் மேன்மையை போதித்த நபிகள் நாயகத்தின் வழிமுறையை அறியாத சில பெற்றோர்களும் பண ஆசைக்கு அடிமையாகி தம் செல்வக் குழந்தைகளின் வாழ்வை சீரழித்துள்ளனர். இந்த ஈனச் செயலுக்கு இந்திய அரசே முழு பொறுப்பேற்க வேண்டும்.

– பேராசிரியர் எம். ஹெச். ஜவாஹிருல்லாஹ், தலைவர், தமிழ்நாடு முஸ்லிம் முன்னேற்றக் கழகம்.



• எம். ஹெச். ஜவாஹிருல்லாஹ்

கூட்டத்தில் பிரிந்து விட்டதாகவும் 'சும்மா' சொல்கிறார்கள். அப்பா அம்மாவைத் தேட முயற்சி செய்யவில்லையா? என்றால் மௌனம் சாதிக்கிறார்கள். 'அங்கே எப்படி பிழைப்பு நடத்தினீர்கள்?' என்றால், 'தொப்பி விற்றோம்', 'செருப்பு விற்றோம்' என்கிறார்களே தவிர, பிச்சை எடுத்ததாக யாரும் ஒப்புக் கொள்ள வில்லை!

"எல்லாம் ஏஜெண்டுகள் புகட்டியிருக்கும் பாடம்!" என்கிறார் Juvenile Welfare Boardன் சேர்பர்சனான விஜயலக்ஷ்மி பண்டிட்! – "இது ஒரு பெரிய கோல்மால்! இங்கே சிலரும், ஜெட்டாவில் சிலருமாக இயங்குகிறார்கள்; குற்றவாளிகளைப் பிடித்துத் தண்டித்தே தீரவேண்டும்" என்கிறார் ஆவேசமாக!

32 சிறுவர்களுக்குப் போலியோ ஊனம்; இருவருக்கு தீப்புண்கள்; ஒருத்தனுக்கு கையில்லை; க்ரைண்டிங் மில்லில் வேலை செய்தபோது வெட்டுப்பட்டு விட்டதாகச் சொல்கிறான்; உண்மை வேறாக இருக்கும் என்பதில் யாருக்கும் சந்தேகமில்லை!

'மீண்டும் சவூதிக்குப் போகிறீர்களா?' என்றால் எல்லோரும் கோரஸாக மறுக்கிறார்கள். 'அங்கே நிறைய கஷ்டப் பட்டு விட்டோம்' என்கின்றனர், கண்களில் நீர் எட்டிப் பார்க்க. மெக்காவிலும், ஜெட்டாவிலுமுள்ள சிறைகளில் இவர்கள் இரண்டு மாதம் வைக்கப்பட்டு, அடித்து, துன்புறுத்தப்பட்டிருக்கின்றனர். பலர் தழும்புகளைக் காட்டினர்; சிலருக்குக் கடினமான வேலை தரப்பட்டிருக்கிறது! "இந்தியா செல்ல வேண்டும்" என இவர்கள் திரும்பத் திரும்பக் கூறியதால், கடைசியில் திருப்பி அனுப்பப்பட்டிருக்கிறார்கள்.

பலருக்குத் தாய்நாடு திரும்பி விட்டோம் என்பதே புரியவில்லை! "அப்பா அம்மாவைப் பார்க்க வேண்டும்; அவர்கள் எங்களைப் படிக்க வைப்பார்கள்!" என்று இந்தப் பிஞ்சுகள் அரற்றும்போது, கல்நெஞ்சமும் உருகி விடும்!

பெற்றோர்களிடம் இவர்கள் திரும்பினாலும், எத்தனை குழந்தைகளுக்கு இந்தப் 'பிச்சைக்காரத்' தொழிலிலிருந்து விடுதலை கிடைக்கப் போகிறதோ?

பெற்றோரால் நிராகரிக்கப்படும் குழந்தைகளை, மேவங்க அரசு தன் குழந்தைகள் காப்பகத்தில் வைத்துக் கொள்ளப் போகிறதாம்! இது, எண்ணெய்ச் சட்டியிலிருந்து தீக்குள் தஞ்சம் புகும் விஷயம் என்று நமக்குத் தெரிந்தது. ஆனால் இந்தக் கள்ளங்கபடமற்ற குழந்தைகளுக்குத் தெரியாத யதார்த்தம்!

மும்பையிலிருந்து : **ஜெயஸ்ரீராஜ்**

‘எதிரெதிரே மங்கையர் இருவர்!
என்னமாயமோ இருவருக்கும் ஒரேமுகம்!!
மயக்கும் மான்விழியோ நான்கு!
பவளச் செவ்வாயோ இரண்டு.
ஏட்டில் எழுத ஒண்ணா இவர்கள்
யாரென்று இயம்ப?’
— இந்த விடுகதைக்கு விடை இருக்கிறது. ஆனால் மோகன்ராமுக்கு...?

# 11





'சுசிலாதான் தனக்காக எதையோ செய்திருக்கிறாள். இல்லாவிட்டால் அவள் பெயரை ஜவஹர் சொல்ல வேண்டிய அவசியமும் இல்லை.' - நினைவுகளின் நெரிசலுக்கு நடுவே முகுந்தனைப் பார்த்துக் கேட்கிறான் மோகன்ராம்.

"முகுந்தா, சுசிலாதான் தாமுவுக்கு நெருப்பு வெச்சுட்டதா ஜவஹர் சொன்னதைக் கேட்டியா நீ?"

"நான் நம்பத் தயாரில்லை. கொஞ்சம் விட்டா நீ வெச்சேன்னு கூடச் சொல்வான். நீ அந்தப் பேச்சை விடு. நம்ப விஷயத்துக்கு வா..." - வேறுவழியின்றி முகுந்தனிடம் வேறு பேச்சுக்கு மாறுகிறான்.

"சொல்லு என்ன விஷயம்?"

"தறி எல்லாம் எரிஞ்சு போச்சே.... அடுத்து என்ன பண்ணப் போறே?"

"அதப்பத்தி நான் யோசிக்கலை முகுந்தன். ஏற்

கெனவே நிறைய கடன். ஆகையால அந்த விஷயத்தை எப்படி ஆரம்பிக்கறதுன்னே தெரியலை..."

"தெளியறதுக்காகக் குழம்பினா தப்பில்லை மோகன். ஆனா குழம்பியே எப்பவும் இருக்கக் கூடாது."

"நீ என்ன சொல்றே?"

"நமக்குள்ள எவ்வளவோ ஆசைகள், லட்சியங்கள். அதை நோக்கி ஒரு அடி கூட எடுத்து வைக்க முடியறதில்லை. அல்ப பிரச்னைகளைச் சமாளிக்கவே நேரம் சரியாக இருக்கு."

"வாஸ்தவம்தான். அதுக்கு என்ன பண்ணச் சொல்றே?"

இந்திரா சௌந்தர்ராஜன்

"ஊர்வம்பு வேண்டாண்டா... அது நம்ம லட்சியத்துக்கு நேர் எதிரி. முதல்ல நாம நம்ம லட்சியத்துல கவனம் சிதறாம பயணம் செய்வோம். அதை அடைவோம். பின்னால சமூகம் பொதுஜனம் பற்றி எல்லாம் சிந்திப் போம்."

– முகுந்தனின் கருத்தில் மோகன்ராம் உடன்பட்டது மாதிரிதான் தெரிகிறான். மௌனமாக நடக்கிறான்.

"இந்தச் சமூகம் எங்கேயும் போயிடப் போறதில்லை. ஆனா நாம பலமில்லாம மோதினா நிச்சயம் எங்கயாவது போயிடு வோம். அதனாலதான் சொல்றேன். முதல்ல பலம் சேர்ப்போம். பின்னால மத்த விஷயங் களைப் பாத்துக்கலாம்."

"உம்... அப்புறம்?"

"நீ உன் வக்கீல் படிப்பை முடி. அது வரைக்கும் வயிறு வளக்கணுமே அதுக்காகத்




திரும்பத் தறி போடு. கடிவாளக் குதிரை மாதிரி ஆயிடு. வேற எதையும் பார்க்காதே. சிந்திக் காதே..."

"மொத்தத்துல ஒண்ணா நம்பர் சுயநல வாதியாயிடுங்கறே, அப்படித்தானே?"

"அடப்பாவி... நல்லதுக்குச் சொல்றதை கொச்சைப்படுத்திட்டியேடா! ஆயுசும் பலமா இருந்தாத்தானே அது நாட்பட உழைக்கும்? நமக்குன்னு ஒரு அந்தஸ்து இருந்தாத்தானேடா நம்ம பேச்சையும் நாலு பேர் கேட்பாங்க. நாமனே அன்றாடங்காய்ச்சியா இருந்தா நம் மனால எதைடா சாதிக்க முடியும்?" – முகுந் தன் வசமாகவே வளைத்துக் கட்டத் தொடங்குகிறான்.

"மோகன் நல்லா யோசிச்சுப் பாருடா. நம்ம வயித்தை விடவாடா ஒரு பெரிய எதிரி இந்த உலகத்துல இருந்துட முடியும்? நம்ம கூடவே இருக்கு.... நாம பாத்து என்ன வேணும்னா பண்ணிக்கலாம். ஆனா ஒழுங்கா அதுக்குச் சோறு போடாம விட்டா நம்ம எஜமான் தானேன்னு அது நினைக்கறதில்லை. நம்மளை மயக்கத்துல பிடிச்சுத் தள்ளிடுது. இதை ஜெயிக்காம வெளிய எந்த ராஜாவை ஜெயிச்சு என்னடா புண்ணியம்?"

– முகுந்தனின் விளக்கத்தில் மோகன் ராமின் சிந்தனையில் ஒரு புதிய கோணம் அகப்படுகிறது. அதில் தேசிகாச்சாரி தெரி கிறார். எப்பொழுதோ அவரிடம் பேசிக் கொண்டிருந்தபோது, 'சாப்பிட்டு கிட்டத்தட்ட பதினைந்து நாட்களாகி விட்டது' என்று அவர் சொன்னது நினைவுக்கு வந்தது. அப்பொழுது விளையாட்டுக்கோ அல்லது எதற்கோ சொன்னதாக சாதாரணமாக உள் விழுந்த விஷயம் இப்பொழுது புதிய பரிமாணமெடுக் கிறது.

'முகுந்தன் சொல்கிற மாதிரி முதல் எதிரியை ஜெயிக்க அவர் வழிபார்த்து விட் டாரோ?'

சின்னக் கடைத்தெருவில் இப்போது அவர்களிடம் நடை....

"டேய்... என்னடா நான் பேசிக்கிட்டு வரேன். பதிலைக் காணோம்?"

முகுந்தன் நிமிண்டுகிறான். தார்ச் சாலையே தெரியாதபடிக்கு கடைத் தெரு. குப்பையுடன் ஏதோ உரம் போட்ட உழுத நிலம் போல காட்சியளிக்கிறது.

நாற்றத்தில் மூக்கு விடைக்கிறது. நூற் றாண்டுக்கு முந்தைய சாலை. விரிவடை யவே இல்லை. ஜனங்களுக்கு அந்தக் கவலை எல்லாம் இல்லாத மாதிரி தெரிகிறது. புன் னகை மாறாமுகத்துடன் தங்கள் வியாகூலமே பெரிதாக அவர்கள். இதில் தன் பங்குக்கு உழப்பிக் கொண்டு திரியும் தடிதடியான கோவில் மாடுகள் வேறு.

"ஏ முகுந்தா! நம்ம வீட்ல இப்படி ஆடும் மாடும் திரிய விடுவோமா? இப்படி ஒரு நாற்றத்தை அனுமதிப்போமா?"

"எதுக்குடா கேக்கறே?"

"இல்ல... நூத்துக்கணக்குல நம்மைத் தாண்டி நடக்கற எந்த ஒரு பொதுஜனத்துக் காவது நாம நடந்து போற பாதை இவ்வளவு மோசமா இருக்கேன்னு துளியாவது கவலை இருக்கா பார்த்தியா?"

"டேய்... டேய்... இப்பத்தான் சொன்னேன் அல்ப கவலைபடறதை விடணும்னு... மண் டைய ஆட்டிட்டு திரும்ப அதுக்குள்ளதானே நுழையறே?"

"முடியலைடா... என்ன ஜனங்கடா இவங்க...?"

"மோகன், நூத்துக்குத் தொண்ணூறு பேர் இப்படித்தான். நூத்துக் கணக்குல சின்னத் தவறுகளை ஒப்புக்கிட்ட சமூகம் இது. லைன்ல குறுக்கே புகறதுல தொடங்கி, பிளாக் டிக்கெட் வாங்கறதுல ஆரம்பிச்சு, எதுல பாரு இலவசப் பசி பிடிச்சுக் கிடக்கறோம். மளிகைக் கடைல கூட கொசுறா பொட்டுக் கடலை கொடுக்கற கடைலதான் உப்பு புளி வாங்குவோம். உன்னைக் கெஞ்சிக் கேட்டுக்கறேன் தயவுசெய்து இந்த சப்ஜெக்டை விடுடா. காதல், சினிமா, அமெரிக்கான்னு எதையாவது பேசுடா..."

– முகுந்தன் நிஜமாலுமே மூக்கைச் சிந்துகிறான்.

"சரி சரி... நீயே அதைப் பத்தியும் பேசேன்..." மோகன்ராம் விட்டுத் தருகிறான்.

"உன் வருங்கால மனைவி பத்தி என்னடா நினைக்கறே...."

"வருங்காலத்தப் பத்தியே நினைக்க முடியலை. அதுல வரப் போற மனைவி பத்தி என்னத்த நினைக்க?"

"உன் வரைல ரெண்டும்தான் முடிவானதாச்சே?"

"என்னடா புதிர் போட்றே?"

"அதான் மாமா வந்துட்டாரே – உனக்கு இனி கவலை இல்லை" – பட்டை கோவிலை தொட்டு நின்று முகுந்தன் சொன்னவிதத்தில் ஏதோ மர்மம்...

"யாருடா மாமா... புதுசா?"

"பழைய மாமாதான் இப்ப புதுசா தெரியறாரு. அதாண்டா பரமக்குடி நரசிம்மனைத்தான் சொல்றேன்."

"அவருக்கென்னடா...?"

"அவர் இன்னுமா உன் வீட்டுக்கு வரலை?"

"தோ பார்... நேரா விஷயத்துக்கு வா. அவர் வீட்டுக்கு வந்ததுக்கும் என் வாழ்க்கைக்கும் என்ன சம்பந்தம்?"

"அவர் மட்டுமா வந்துருக்கார், கூட ஒரு ஊர்வசியும் வந்துருப்பாளே?"

"ஓ... நீ கனகாவைச் சொல்றியா?"

"ஆள் எப்படி?"

"நல்ல லட்சணம். ஆமா அதுக்கென்னடா?"

"டேய் நீ ட்யூப் லைட்டா.. இன்னுமாடா புரியலை."

"பாம்..." 'காதைக் கிழிக்கும் சப்தத்துடன் நாலாம் நம்பர் அயோத்தியாபட்டணம் பஸ் உரசிச் செல்கிறது. ஊஹூம் பறந்து செல்கிறது. போனவன் வந்தவனிடமெல்லாம் டிவிஎஸ் சுசுகி. வாயுமண்டலமே வண்ணம் இழந்துவிட்ட அசுத்த நிலை. எங்கு பார்த்தாலும், யாரிடம் பார்த்தாலும் வேகம்... வேகம்... வேகம்...

"டேய்ய்..." – மோகன்ராமின் கவனப் பிசகைப் பற்றி உகப்புகிறான் முகுந்தன்.

"என்னடா...?"

"என்ன பதிலே காணோம்...?"

"சாரிடா முகுந்தன். அழகான பெண்ணுக்கு ஆயிரம் மாப்பிள்ளை கிடைப்பாங்கடா. ஆனா ஊனமுள்ள பொண்ணோட நிலை அப்படி இல்லை. ஆகையால என் வாழ்க்கைல கல்யாணம்னு ஒண்ணு நடந்தா அது ஊனமுள்ள ஒரு பெண்ணோடதான்."

"ஆமா நீ கனகாவை முழுசா பாக்கலையா?"

"ஏன் எதுக்குக் கேக்கறே...?"

"போய்ப் பாரு. ஆல்த பெஸ்ட் மோகன். எப்படியோ உன் லட்சியமும் ஈடேறப் போகுது. வாழ்க்கையும் மாறப் போகுது. நல்லா இரு."

– முகுந்தனின் பதில் புரியாமல் அப்போதைக்கு விழிக்கத்தான் முடிந்தது மோகன்ராமால்!



"எம்.எல்.ஏ. பையன் புகார் கொடுத்தானேன்னு அந்த பையன பிடிச்சி ஜெயில்ல போட்டது தப்பா போச்சு..."

"ஏன்? என்னாச்சி சார்?"

"நான் ஜெயில்ல போட்ட பையன் அமைச்சரோட மகனாம்!"

– நாகூர் ஆர். லோகநாதன்

ஒரு கால்தான்... ஆனால் அதை வைத்துக் கொண்டே வீடு முழுக்கக் கூட்டி குப்பை அள்ளி, அடுப்பங்கரையிலும் சாணியிட்டு மெழுகி ஸ்வாமி சன்னதியின் சின்ன அகல் விளக்கையும் பொன் போல துலக்கி விளக்கேற்றி கனகா ஏக காரியம் செய்து விட்டாள்!

"எதுக்கும்மா உனக்கு வீண் சிரமம்...?" என்கிற மகாலட்சுமியின் வார்த்தைகளைக் கண்டுகொள்ளவேயில்லை.

வீட்டுக்குள் காலண்டரில் தேதி கிழிபடாமலும், நிலைக்கண்ணாடி அழுக்குப் படிந்தும், தரிமேடையில் கெண்டைகள் சிதறியும்

பலவாறு கிடக்கிறது. எல்லாமே இப்பொழுது ஓர் ஒழுங்குக்கு வந்து விட்டிருக்கிறது.

தளர்ந்து போய் தொங்கிக் கொண்டிருந்த துணிக்கொடி கூட விரைப்பாகி, அதில் கச முசாவென்று கிடந்த துணிகள் மடிக்கப்பட்டு, பதவிசாக தொங்கிக் கொண்டிருக்கிறது.

ஒரு பெண் தானும் அழகாய் இருந்து சூழ லையும் அழகுபடுத்தி விட்டால் அங்கே கோயில் களை வந்து விடுகிறது.

கனகா இனி அது தன் வீடு என்று நினைத்து விட்டதும் பளிச்சென்று தெரிகிறது. மகாலட்சுமிக்கு மகிழ்ச்சி பிடிபடவில்லை. 'இப்படி எல்லாம் கூடவா வாழ்க்கை திசை திரும்பும்?' என்று கேள்வி கேட்டு தனக்குள் ளேயே நெகிழ்ந்து போய்க் கிடக்கிறாள்.

அந்த மகிழ்ச்சியை அவளால் சுமக்க முடிய




வில்லை. அக்கம் பக்கம் பகிர்ந்து கொள்கிறாள்.

"அப்ப எப்போ மோகனுக்குக் கல்யாணம்?" என்று நேராகவே பலரும் கேட்கின்றனர்.

"நம்ம கையிலயா இருக்கு. எல்லாம் அவன் கையில..." என்று பொத்தாம் பொதுவாக ஒரு பதில் சொல்கிறாள்.

"மகா... நீயும் இனிமே பரமக்குடி போயிடு வேன்னு சொல்லு..."

"மாட்டேண்டியம்மா... என்னால இந்த ஊரைப் பிரிய முடியாது."

"எப்படியோ இனியாவது மோகன் ஊர் வம்பு இல்லாம அமோகமா இருந்தா சரி..."

"ஆமாமா... அந்த தாமு எரிஞ்சதுல கூட ஏதோ கசமுசா இருக்கு போல. நம்ப மோகன் தான் ஏதோ பதிலுக்கு பண்ணிப்பிட்டதா பேச்சிருக்கு! இதுக்கு எதுக்கு இந்த ஊர்ச் சனியன்? சீக்கிரமா கல்யாணத்த பண்ணி அனுப்பி வை."

பேச்சின் முடிவில் இப்படி அஸ்திரம் திரும்பும் என்று மகாலட்சுமியே நினைக்க வில்லை. அதுவரை ததும்பிய மகிழ்ச்சி ஆவி யாகிறது. சோர்ந்து போகிறது மனது. மோகனுக்கு ஏதாவது ஆகிவிடுமோ? வீட்டுக் குள் நுழைபவளின் முகக் குறிப்பறிந்து கன காவும் கூடக் கேட்கிறாள்.

"என்ன அத்தை... ஏன் ஒரு மாதிரியா இருக்கீங்க...?"

"ஒண்ணுமில்லம்மா...."

"இல்ல ஏதோ பிரச்னை. வெளிய யாரா வது எதாவது சொன்னாங்களா? போயும் போயும் உனக்கெதுக்கு நொண்டி மருமகன் னாங்களா?"

"ஐயோ..." தாவி வந்து கனகாவின் வாயைப் பொத்துகிறாள்.

"வேற என்ன அத்தை?"

"எல்லாம் மோகனை பத்தித்தாம்மா... அவனுக்கு அவன் வாழ்க்கைக் கவலையை விட ஊர்க் கவலைதாம்மா எப்பவும் பெரிசு. அதனால புதுசு புதுசா வம்புங்க."

"தெரியும்... சில ரவுடிங்க கூட வீட்டுக் குள்ள நுழைஞ்சு தறிக்கு நெருப்பு வெச்சுட் டாங்கன்னு கேள்விப்பட்டேன்."

"அதனாலதான் நான் பயப்படறேன். இப்ப அந்த நெருப்பு வெச்ச பயலுக்கு யாரோ நெருப்பு வெச்சுட்டாங்க! அத செஞ்சது மோகன்ராம்தான்னு ஒரு பேச்சு அடிபடுதும்மா..."

அதைக் கேட்க கனகாவுக்கும் கலங்கியது மனது.

"இருக்காது... அத்தான் பழிக்குப் பழி வாங்குவார்னு நான் நம்பலை" என்கிறாள் உடனேயே. மகாலட்சுமி கனகாவை அடுத்த க்ஷணமே ஆழமாக ஏறிடுகிறாள்.

"கொஞ்சம் கூட பழகாம எப்படிம்மா என் மகன் பத்தி இப்படிச் சரியான அபிப்ராயம் சொல்றே நீ?" – கேட்கிறாள்.

"எனக்கு சொல்லத் தெரியலை அத்தை. அவர் முகத்தைப் பார்த்தா அவர்கிட்ட அழுக் கான விஷயம் இருக்க முடியாதுன்னு ஒரு நம்பிக்கைதான்..."

"பரவால்லம்மா... அவனுக்கு ஏத்தவதான் நீ?" – மகாலட்சுமி நிஜமாலுமே மகிழ்ந்த அந்த நொடிப் பொழுதில் கொல்லைப்புறம் அரவம் கேட்டது. திரும்பிப் பார்த்தபோது கவிலா தெரிந்தாள்.

"வாடி..." என்று அவளுக்கு அழைப்பு விடுக்குமுன் வாசல் பக்கமும் நிழல் விழுந்தது. திரும்பிப் பார்த்தால் முகம் கொள்ளாத துக்கத் தவிப்போடு பானு!

(தொடரும்

தாமிர ஆலை:

# தூத்துக்குடிக்கு ஒரு தூக்குக் கயிறா?

கடந்த இரண்டு வருடங்களாகத் தூத்துக்குடியில், உண்ணாவிரதம், ஆர்ப்பாட்டம், தர்ணா, பேரணி, மறியல் என்று பல விதமான எதிர்ப்பு முறைகள் கையாளப்பட்டு வருகின்றன. மீனவர்களும் சுற்றுச் சூழல் ஆர்வலர்களும் துடித்தெழுந்திருக்கிறார்கள். சமீபத்தில் இப் போராட்டங்களுக்குப் பலம்சேர்க்கும்விதமாக வை.கோ. மிகப் பெரிய பேரணி ஒன்றையும் நடத்தினார். எல்லாம் எதற்காகத் தெரியுமா? ஸ்டெர்லைட் இண்டஸ்ட்ரீஸ் என்ற தாமிர உருக்காலையைத் தூத்துக்குடியில் இருந்து விரட்டுவதற்காகத்தான்!

"இந்த ஆலை வெளிப்படுத்தப் போகும் கழிவுகளால் மண்வளம், நிலத்தடி நீர் ஆகியவை பாழாகும் என்பதைத் தவிர அரிய கடல்வாழ் உயிரினங்கள் இறந்து போகும்; மக்கள் சொல்ல முடியாத உபாதைகளுக்கும் ஆளாவார்கள்" என்று சொல்லுகிறார் வழக்கறிஞர் மோகன். தேசியச் சுற்றுச் சூழல் பாதுகாப்புக் குழுவின் செய்தித் தொடர்பாளரான மோகன் சொல்லும் மற்ற தகவல்கள் நம்மை அதிர்ச்சியடைய வைக்கின்றன.

"உலகெங்கிலும், தாமிர



உருக்காலைகள் மூலம் உண்டாகும் சுற்றுச் சூழல் கேடுகள் ஏராளம். அமெரிக்காவில் காப்பர் ரேன்ஞ் என்ற கம்பெனி, சுற்றுச்சூழல் பாதிப்புக்காக மக்களுக்கு இருநூறு மில்லியன் டாலர் நஷ்டஈடு கொடுத்திருக்கிறது!

பெரு மற்றும் நைஜீரியா போன்ற நாடுகளில் உள்ள தாமிரத் தொழிற்சாலைகளும் கடும் எதிர்ப்புக்கு உள்ளாகி இருக்கின்றன. இதற்கு இரண்டு காரணங்கள் : ஒன்று, இந்த ஆலைகள் உற்பத்தியின்போது வெளிப்படுத்தும், திட, திரவ, வாயு, கழிவுப் பொருள்கள், மக்களின் ஆரோக்கியத்துக்குக் கேடுவிளைவிப்பவை என்பது. அடுத்ததாக, இதுபோன்ற ஆலைகளுக்கு நல்ல தண்ணீர் மிக அதிகமாகத் தேவை. இதனால் நிலத்தடி நீரும் ஆபத்துக்குள்ளாகும்.

"இனி தூத்துக்குடியிலுள்ள ஸ்டெர்லைட்டுக்கு வருவோம். இது ஒரு என்.ஆர்.ஐ. திட்டம். வெளிநாட்டில் வாழும் ராஜஸ்தானைச் சேர்ந்தவர்கள், 1300 கோடி ரூபாய் முதலீட்டில் துவங்கியிருக்கும் தொழிற்சாலை. தாமிரத்தை உருக்கி, மின்கடத்திக்குத் தேவையான செப்புக் கம்பிகள் தயாரிப்பது தவிர, எண்ணெய்ச் சுத்திகரிப்பு ஆலையையும் நிறுவி டிரான்ஸ்ஃபார்மர் எண்ணெய் போன்றவற்றைத் தயாரிப்பது இவர்களின் நோக்கம். ஆனால் இப்போது தாமிர உருக்காலைக்கு ஏற்பட்டிருக்கும் கடுமையான எதிர்ப்பினால் எண்ணெய்த் தொழிற்சாலைத் திட்டத்தைக் கொஞ்சம் ஓரம் கட்டி வைத்திருக்கிறார்கள்.

"ஆலைக்குத் தேவையான தாமிரத் தாதுவை, ராஜஸ்தானிலிருந்தும் மொராக்கோ நாட்டிலிருந்தும் பெறுவது கம்பெனியின் திட்டம். ஒருநாளைக்கு 1250 மெட்ரிக் டன் தாமிரத் தாதுவைப் பயன்படுத்தி, குளோரின் மூலம், தாமிரத்தை பிரித்தெடுப்பார்களாம். இந்த உற்பத்தி முறையின்போது வெளிப்படும், திட, திரவ, கழிவுப் பொருட்கள் கடுமையான விஷத் தன்மை வாய்ந்தவை. காற்றில் கலக்கும் மாசுகளால், மக்களுக்குப் பலவித நோய்கள் வரும். உதாரணமாக ஆர்ஸனிக் என்ற கெமிகல், மனித ரத்தத்தில் ஊடுருவும் வாய்ப்புக்கூட இருக்கிறது. மேலும், பென்சின், டோலின் மற்றும் கன உலோகங்கள் ஆகியவற்றைக் கடலில் விட்டால், மீன்கள் இறந்து போகும். அதனால் மீனவர்களின் தொழில் பாதிக்கப்படும்.

"கழிவுநீரை நிலத்தில் தேக்கி வைத்தால், நிலத்தடி நீர் விஷமாகிப் போகும். தாமிரத் தாதுவில் கேடுவிளைவிக்கும் யுரேனியத்தின் அளவு அதிகமாக இருக்கும். ஒரு டன் உற்பத்தியில், ஒன்றரை கிலோ உலோகக் கழிவு தவிர நிக்கல், கோபால்ட் போன்றவையும் வெளியாகும். இந்த ஆலைக்கு ஒருநாள் தண்ணீர் தேவை என்பது சுமார் இரண்டு லட்சம் மக்களுக்குத் தேவையான குடிநீர்!

"நிலைமை இப்படியிருந்தும் ஒரு தனியார் நிறுவனம் தயாரித்துக் கொடுத்த ஆய்வறிக்கையின் அடிப்படையில் மத்திய அரசும், மாநில அரசும் இந்தத் தொழிற்சாலைக்கு அனுமதி வழங்கி விட்டன. ஆனால், 'அந்த ஆய்வறிக்கை மிகவும் அபத்தமானது' என்று அந்த அறிக்கையை ஆய்வு செய்த டாக்டர் தவே சான்டில்லோ கூறியிருக்கிறார். அமெரிக்காவில் உள்ள எக்ஸ்டெர் பல்கலைகழகத்தைச் சேர்ந்தவர் இவர்.

"1992ல் மகாராஷ்ட்ராவில் ரத்னகிரியில் ஸ்டெர்லைட் தொழிற்சாலை அமைக்கப்




## கொசுவை விரட்டும் செடி!

'**வீ**ட்டுக்கு ஒரு மரம் வளர்ப்போம்'- இது அரசின் கொள்கை. 'படுக்கை அறைக்கு ஒரு செடி வளர்ப்போம்'- கொசுத் தொல்லையால் அவதிப்படுவோர் பின்பற்ற வேண்டிய புதுக் கொள்கை இது. சிட்ரோஸா என்றழைக்கப்படும் புதியசெடி ஒன்றை உயிரியல் மரபணுத் தொழில்மூலம் விஞ்ஞானிகள் உருவாக்கியுள்ளனர். இதனை நம் படுக்கையறையில் தொட்டிகளில் வைத்து வளர்க்கலாம். நேரடியாக சூரிய ஒளி படக்கூடாது; எப்போதும் மூடப்பட்ட அறையாக இருக்கக் கூடாது. காற்றும் நீரும் தொடர்ந்து கிடைத்தால் மூன்றாண்டுகள் வரை இச்செடி உயிர்வாழும். இச்செடி உள்ள இடத்தில் கொசு, ஈ போன்றவை சுத்தமாக வராது. ரூ.250 விலையுள்ள சிட்ரோஸ் செடி தற்போது ஐதராபாத்தில் விற்பனைக்குக் கிடைக்கிறது.

– பூங்கோதை கிருஷ்ணராஜ்.

படுவதாக இருந்தது. கட்டுமானப் பணிகள் துவங்கின. அந்த இடம் மாம்பழத்துக்குப் பெயர் போன பகுதி. அங்கு விளையும் அல் போன்ஸா மாம்பழங்கள், கோடிக் கணக்கில் அந்நியச் செலாவணி யைச் சம்பாதித்துத் தருகின்றன. ஸ்டெர்லைட் ஆலையினால் மாம்பழங்களுக்கு ஆபத்து என் பதை உணர்ந்த ரேஷ்மி மயூர் போன்ற சுற்றுச் சூழல் ஆர்வலர் கள், மக்களைத் திரட்டிப் போரா டியதன் காரணமாக, அங்கு வாலைச் சுருட்டிக் கொண்டு, ஜெயலலிதாவின் ஆட்சியில் (வழக்கமான மரியாதைகள் செய்த பிறகு) தமிழகத்துக்குள் நுழைந்து விட்டது. ஜெ.தான் அடிக்கல் நாட்டினார். அவரு டைய ஆட்சியில்தான், சுற்றுச் சூழல் குறித்த பலத்த சர்ச்சைக் கிடையே டூபாண்ட் ஆலைக்கும் அனுமதி வழங்கப்பட்டது என்பது குறிப் பிடத்தக்கது.

# பெரியாரின் துலாபாரச் சாதனை!



தந்தை பெரியாருக்கு உள்ள தனிச் சிறப்புகளில் ஒன்று துலாபாரச் சாதனை! இதோ எடைக்கு எடை அவர் பெற்ற பொருட்களும் அவற்றை அளித்த மக்கள் வாழும் ஊர்களும்.

பால் – திருச்சி, நெல் – காஞ்சி, உப்பு, அரிசி – சிவகங்கை, கைத்தறி ஆடைகள் - குடியாத்தம், வெல்லம் – மதுரை, தேங்காய் - கோவை, காப்பிக் கொட்டை - சிதம்பரம், அரிசி, நெல், கோதுமை, கேழ்வரகு, உப்பு போன்ற 86 வகைப் பொருட்கள் – பாபநாசம், பிஸ்கட் - பண்ருட்டி, காய்கறிகள் – பெங்களூர், வெள்ளிக்காசுகள் – தஞ்சாவூர், வெங்காயம் – பெரம்பலூர், பெட்ரோல் – குளித்தலை.

ஆதாரம் : சிந்தனைக்கு விருந்தாகும் மணியான செய்திகள்.

தகவல் : நெ. இராமன்.

"ஸ்டெர்லைட் கம்பெனியின் நோக்கம் கழிவுகளைக் கடலில் விட்டு விடுவதுதான். என்னதான் சுத்திகரிப்புச் செய்து கடலில் விட் டாலும், கழிவுகளில் உள்ள விஷத்தன்மை நீங்காது. போராடும் மீனவர்களால் கழிவுக் குழாய்கள் பலமுறை உடைக்கப்பட்டிருக் கின்றன. கடுமையான போராட்டம் கார ணமாக, மூலப்பொருளான தாமிரத் தாதுவைக் கப்பலிலிருந்து இறக்க முடியவில்லை. இந்த ஆலைக்காகத் தாமிரபரணி படுகையில் இருந்து நிலத்தடி நீரை உறிஞ்சியெடுப்பதால் அந்தப் பகுதியில் நீர்வளம் மோசமான அளவுக்கு பாதிக்கப்படும்.

"1994, ஜனவரியில் வெளியிடப்பட்ட மத் திய அரசின் அரசாணைப்படி, மாசு ஏற் படுத்தக்கூடிய தொழிற்சாலைகளை, பொது மக்கள் கருத்து அறிந்த பின்தான் நிறுவ வேண்டும் என்று விதி இருக்கிறது.

"தூத்துக்குடியை ஒட்டிய மன்னார் வளை குடாவில் 'தேசிய கடல்வாழ் உயிரினங்கள் வளாகம்' (National Marine Park) அமைக்கப்பட இருக்கிறது. இங்கு அரிய கடல்வாழ் உயி ரினங்கள் இருக்கின்றன. பவழப் பாறைகள் நிறைந்திருக்கின்றன. எனவே இந்தப் பகுதியில் கடலிலிருந்து 25 கி.மீக்குள் மாசு உண்டாக்கும் தொழிற்சாலை அமைக்கக் கூடாது என்ற விதி யும் இருக்கிறது!

"இந்த விதிகளையெல்லாம் மீறித்தான் ஸ்டெர்லைட் நுழைந்திருக்கிறது. எந்த ஒரு வளர்ச்சியும் மக்களுக்காகத்தான். அந்த மக்களைப் பாதிக்கக்கூடிய வகையில் வளர்ச்சி தேவைதானா?

"இப்போது ஸ்டெர்லைட் கம்பெனிக்கு ஆதரவான வாதங்களை எடுத்து வைத்திருக் கிறார் மாசுக்கட்டுப்பாட்டுத் துறை அமைச்சர் என்.கே.கே. பெரியசாமி. "கழிவுநீர் கடலில் கலக்க அனுமதிக்கப்படாது என்றும், விஷ வாயுவான சல்பர் டை ஆக்ஸைட் காற்றில் கலக்காமல், சல்ஃப்யூரிக் அமிலமாக மாற் றப்படும் என்றும் தெரிவித்துள்ளார். இதைவிட அவர் சொல்லியிருக்கும் மற்றொரு விஷயம் கொஞ்சம் வேடிக்கையானது. முதல் முறை கொடுக்கும் நீரை, recycle செய்து பயன்படுத் திக் கொள்ள வேண்டும் என்றும் சொல் லப்பட்டிருக்கிறதாம்!

"சல்பர் டை ஆக்ஸைடை, சல்ஃப்யூரிக் அமிலமாக மாற்றி, நிலத்தில் விட்டால் நிலத் தடி நீர் பாழாகிப் போகாதா?

"'கழிவுகள் கடலில் கலக்காது' என்கிறார் கள். ஆலைக்குள்ளேயே குளம் போல் தேங்க விட்டாலும், வண்டல்கள் ஊடுருவுவதன் மூலம் நிலத்தடி நீர் பாதிக்கப்படுமே. ஒருமுறை கொடுத்த தண்ணீரை recycle செய்து கொள் வார்கள் என்றால் நிரந்தரமாகத் தண்ணீர் எடுத்து வர குழாய்கள் கிளம்புவது ஏன்? இதெல்லாம் வெறும் கண்துடைப்பு!

"ஆகவேதான் இந்த விஷயத்தில் மக்களுக்கு நியாயம் கிடைக்க நாங்கள் நீதிமன்றத்தை நாடியிருக்கிறோம். ஜனநாயக முறையிலான எங்கள் எதிர்ப்புகளும் தொடர்கின்றன!"

சந்திப்பு : ப்ரியன்

## வட்டமேஜை:

**ரூ.20 பரிசு பெறும் கடிதம்**

✉ ராஜீவ் ஆட்சிக் காலத்தில் குவாட்ரோச்சியின் சர்வ வல்லமைக்குக் காரணம் சோனியா காந்திதானா? குவாட்ரோச்சியின் பின்னணி, செல்வாக்கு ஆச்சர்யப்பட வைக்கிறது! காங்கிரஸ்காரர்கள் சோனியாவை தலைமைப் பதவிக்குக் கொண்டு வர ஆசைப்படுவது இந்தத் தகுதியால்தானா? ராஜீவ் பிரதமராய் இருந்தபோதே இந்தளவு ஆதிக்கம் செலுத்திய குவாட்ரோச்சி சோனியா பிரதமராய் இருந்தால் நிழல் பிரதமராய் இருப்பாரோ எனவும் சந்தேகப்பட வைக்கிறது!

குடந்தை, பாலாஜி.

✉ 'காலமெல்லாம் காதல் வாழ்க' படத்தினைப் பார்க்கும் 'பாக்கியத்தை' நானும் பெற்றேன். பல்வேறு பத்திரிகைகளில் வந்த அப்படத்தின் விமர்சனங்களையும் படித்தேன். 'காதல் கோட்டை'யை மனத்தில் கொண்டு அவலை நினைத்து உரலை இடித்த கதையாக இரண்டேகால் மணி நேரம் இம்சையில் நெளிய வைத்த அப்படத்தில், ரசிக்கும்படியாக எதுவும் இல்லை என்பதுதான் என் கருத்து. ஆனால் பல பத்திரிகைகளும் ஆஹா, ஓஹோவென விமர்சனம் எழுதியது எப்படி என்று புரியவில்லை. ஒருவேளை நமக்குத்தான் ரசனை கெட்டுப் போய் அப் படத்தை ரசிக்கத் தெரியாமல் போய் விட்டதோ என்ற ஐயத்தில் குழம்பியிருந்தேன். 'கல்கி' விமர்சனம் கண்ட பிறகே குழப்பம் தீர்ந்தது. இந்தப் படத்திற்கு சரியான விமர்சனம் எழுதியிருந்தது 'கல்கி' மட்டுமே.

கபிஸ்தலம், எஸ். இராஜேந்திரன்.

✉ ஆபாசமில்லாத ஒரே காரணத்திற்காகவாவது 'காலமெல்லாம் காதல் வாழ்க' படத்தை ஒரு வரி எழுதிப் பாராட்டியிருக்கலாமே!

ஊஞ்சவேலாம்பட்டி, டி. பசுபதி.

✉ பெற்றோர்களின் பணத்தைத் தான் தோன்றித்தனமாகச் செலவழிக்கும் கல்லூரி மாணவர்களுக்கிடையே ஒரு தாசில்தாரின் மகனாக இருந்தும் உழைப்பின் மூலம் படிக்கும் சண்முக ராஜசேகர், அவருடைய கல்லூரிக்கு மட்டுமல்ல ஸ்டார்; இன்றைய மாணவ இளைஞர்களுக்கு அவர்தான் 'சூப்பர் ஸ்டார்'!

சென்னை - 1, கே. ஆர். உதயகுமார்.

✉ 'கவிதை பாடும் கட்டடங்கள்' கட்டுரை நேரில் சுற்றிப் பார்த்த திருப்தியைத் தந்தது. நம் கலாசாரத்தை - கலையம்சத்தைப் பறை சாற்றும் காலச் சுவடுகள். அது சரி, இது ஜெ.சசிக்கு சொந்தமானதல்ல என்று பின்குறிப்பு போடக் கூடாதோ?

மேல்பட்டி, எல். மாறன்.

✉ தன்னம்பிக்கையும், விடாமுயற்சியும் இருந்தால் எந்தத் துறையிலும் வெற்றி பெற முடியும் என்பதை ஸ்ரீமதி நிரூபித்து விட்டார்.

காப்பரத்தாம்பட்டி, கே. ராஜாதிருவேங்கடம்.

✉ கலைஞருடனான சாவியின் தூய நட்பைப் பற்றிப் படித்ததும் கண்ணன் - குசேலர் கதைதான் நினைவுக்கு வந்தது. குசேலருக்கு அவலைப் போல, சாவிக்கு எடுத்துப் போக இலக்கியம் கிடைத்திருக்கிறது!

சேலம் - 2, சூர்யநிலா.

✉ "மாற்றல்" மூலம் அதிர்ச்சி அளித்த சுஜாதா, "வித்யாவின் குழந்தை" மூலம் இன்ப அதிர்ச்சி ஏற்படுத்தி, ஒரு நல்ல மகள் - அப்பா உறவைக் காட்டியுள்ளார். வெல்டன் சுஜாதா!

கவுண்டம்பாளையம், பலராம் செந்தில்நாதன்.

**கண்ணன்-குசேலனை ஒப்பகப்படுத்தியது!**

✉ '100/100 சிரிப்பு வரும்' பகுதியைப் படித்துவிட்டு, சிரிக்காமல் இருந்து விடுவேன் என்று சவால் விட்ட நான் இறுதியில் பெயிலாகிப் போனேன்.

மதுரை-10, செ. மலர்விழி.

✉ ஒரு சமூக விரோதியை நாயகனாக உருமாற்றும் சோப்ராஜின் கதை திரைப்படமாக வருவதற்கு முன் அதைத் தடைசெய்ய வேண்டும். ஏற்கெனவே கதைப் பஞ்சம், ஆபாசம், அர்த்தம்புரியாத பாடல் வரிகளுடன் வந்து கொண்டிருக்கும் திரைப் படங்களின் நிலையை இது மேலும் நிலை குலைக்கும்!

திருப்பூர், ப. சங்கர்.

"இது என்ன சத்திரத் திண்ணையா? எழுந்திருடா."

எட்டுக்கட்டையை மீறிய கோபாலனின் குரல் திண்ணைப் பரதேசியை சவுக்கால் ஒரு விளாசு விளாசியது. பதறிப்போய் எழுந்து கொண்டான்.

திண்ணை மேல் ஏறிய நாய், விரட்டியவுடன் வாலைத் தழைத்துச் செருகிக் கொண்டு இறங்குவது போல் இறங்கினான்.

சரியான பத்தரை மாற்றுப் பரதேசி. பாப்பா வெளுத்துப் போன கண்கள். அவற்றின் ஓரங்களில் துளிர்த்திருந்த புளிச்சை. எலும்புக் கூட்டின் மேல் தோலைப் போர்த்தியிருந்தது போல் உடம்பு. அழுக்கும் சிடுக்குமாகப் பரட்டைத்தலை. முகம் மறைத்து தாறுமாறாக வளர்ந்த தாடி. நிறமிழந்து பல தையல்கள் கண்டு நைந்து போன வேட்டி. அழுக்கான மூட்டை.

ம ஞ் ச ள்




அழுக்கு அடைத்த பற்களைக் காட்டி ஒரு சிரிப்பு சிரித்தான். இல்லாதவர்கள், இருப்பவர்களைப் பார்த்துச் சிரிக்கும் மரியாதை கலந்த பயச்சிரிப்பு.

"ராத்திரில குளுரு தாங்கலை. ஒரு கிழிஞ்ச போர்வை இருந்தா குடுங்க சாமீ.."

"போர்வையுமில்ல. புண்ணாக்குமில்ல. வந்துட்டான் வெளக்கு வக்கற நேரத்துல... போ.. போ.."

கோபாலனின் பதில் அவனுக்கு ஒன்றும் ஏமாற்றத்தைத் தரவில்லை. எத்தனை எத்தனை மறுப்புக்குரல்களைக் கேட்டுப் பழகியிருப்பான். நகர்ந்து விட்டான்.

கோபாலன் வீட்டுக்குள் திரும்பினார்.

அவருடைய கோபம் பரதேசியின் மீது அல்ல என்று வைதேகிக்குத் தோன்றியது.

**சுபா**

ஊரே அமர்க்களப்பட்டுக் கொண்டிருந்தது. இளைஞர்கள் தெருவெங்கும் தோரணம் கட்டியிருந்தார்கள். பெண்கள் வீதி அடைத்துக் கோலங்கள் போட்டிருந்தார்கள். புதுப்பழக்கமாக, மில்காரர் உபயமாக, மூன்று நிறத்தில் சுவரொட்டிகள் சுவர்களை நிறைத்திருந்தன. பக்கத்து ஊரில் இருந்து ஆள் தருவித்து பந்தல். பலகைகளால் மேடை. மைக் செட்டில் அவ்வப்போது 'ஹலோ... ஒன்-டூ-த்ரீ' என்று தொண்டைக் கமறல்கள்: வான்நிலா யாவற்றையும் மவுனச் சிரிப்புடன் வேடிக்கை பார்த்தது.

கோபாலன் நாற்காலியில் உட்கார முடியாமல் எழுந்திருப்பார். துண்டை மடித்துத் தோளில் போடுவார். செருப்புகளை அணிவார். வாசல்படியில் தயங்கி உள்ளே திரும்புவார். செருப்புகளை உதறி விட்டு முற்றத்தில் கால் அலம்பி நாற்காலியில் உட்காருவார். தொண்டைக்குழி தாண்டாமல் என்னவோ முணுமுணுப்பார். மறுபடி செருப்பு, மறுபடி வாசல்படி, மறுபடி தயக்கம். மறுபடி முற்றம். மறுபடி நாற்காலி.

அடுப்பில் வேலை செய்து கொண்டே வைதேகி அவரைப் பார்த்து மருகினாள். பேசக் கொடுக்க பயமாய் இருந்தது. பற்றி எரியும் வெடிகுண்டுத் திரியை ஊதி அணைக்கப் பார்த்தது போல் ஆகிவிட்டால்?

போன வருஷம் வரைக்கும் திருவிழா சமயத்தில் இந்த மனிதரை வீட்டில் பிடிக்க முடியுமா? குதிகால் பூமியில் படாமல் இங்கேயும் அங்கேயுமாக விரைந்து கொண்டேயிருப்பார். அவர் வாயிலிருந்து உதிரும் வார்த்தைகளுக்காக, விரல் நுனியில் கிடைக்கப் போகும் சமிக்ஞைகளுக்காக, நான்கைந்து தலைகள் அவரைச் சுற்றி அண்ணாந்திருக்கும். போருக்குத் தயாராவது போல வீடே ரகளைப்படும்.

"ஒரு வா காப்பி சாப்பிடக் கூடாதா?"



"இப்ப நிக்க நேரமில்ல வைதேகி. பல்லக்கு தூக்கறவங்க திடீர்னு கூலி தகராறு பண்றாங்க. அது தீர்ந்தப்புறம்தான், தண்ணி எறங்கும். கபாலி வந்தானான்னு கேக்கத்தான் வீட்டுக்கே வந்தேன்."

"வரலியே..."

"போன வருஷம் கட்டுன மாலை பெருமாள் வயறைக் கூடத் தாண்டலை. ரெண்டடி ஜாஸ்தியா கட்டச் சொல்லணும் அவன் கிட்ட... பெருமாளுக்குன்னு கூடப் பாக்காம நாலு முழம் அளந்தா ரெண்டு ஜாண் குறைக்கற ஜன்மம்..."

போகிற போக்கில் ஒரு நிமிஷம் நின்றாலும் பல்லக்கு, பெருமாள் பூ ஜோடனை, வீதி ஊர்வலம் என்றுதான் பேச்சு இருக்கும். பதினைந்து நாள் முன்னதாகவே 'பெருமாள் ஜுரம்' பிடித்து விட்டால், ஊர்வலம் முடிந்து சிதறிய பூக்கள் எல்லாம் தெருவிலிருந்து சுத்தமாகும் வரை வேகம் குறையாது.

எந்தக் கொள்ளிக் கண் பட்டதோ, இந்த வருடம் பொறுப்பு கை மாறி விட்டது. இத்தனைக்கும், கைமாறியது யாரோ ஒருத்தரிடம் அல்ல. கோபாலனின் நெருக்கமான சிநேகிதராயிருந்த ராஜாராமனிடம்தான்.

இருவருக்கும் ஒத்த வயது. 'மாங்கா அடிக்கிற' பருவத்திலிருந்தே பழக்கம். இருவருமே கல்லூரிக்காக திருச்சி போனார்கள். படித்து முடித்ததும் ஊரிலேயே சொந்தத் தொழில் புரிந்தார்கள். மணம் முடித்தார்கள். மூன்று மூன்று குழந்தைகளைப் பெற்றுக் கொண்டார்கள். ஊரில் அவர்களுக்கு ஜோடிக் காளை என்றுதான் பெயர். ஒரு முகத்தின் இரண்டு கண்களாகப் பார்த்தார்கள். இரு காதுகளாகக் கேட்டார்கள். இரு கைகளாக இயங்கினார்கள். இரு கால்க்ளாகச் சுற்றி வந்தார்கள்.

கல்யாணமானால் நட்பு கலைந்து விடும் என்று ஊர்க்காரர்கள் எதிர்பார்த்தது பலிக்கவில்லை. வைதேகியும்,

விசாலாட்சியும் ஒரு பூவின் இரண்டு இதழ்கள் போல அமைந்து விட்டார்கள்.

அப்போது பொத்தி வைத்த நட்பு இப்போது குழந்தைகளால் பொத்துக் கொள்ள வேண்டும் என்பது விதி போலும்!

கோபாலனின் மூன்றாவது மகளை தன் மூத்த மகனுக்குப் பெண் கேட்டு ராஜாராமன் வந்த அன்றைக்கு திரி பற்றிக் கொண்டது.

கோபாலனின் மகள் பட்டணத்துப் படிப்பில் மும்முரமாயிருந்தாள். அப்பா அவளிடம் கல்யாணம் பற்றிப் பேசியதும் முகம் சிறுத்து விட்டது.

'உங்களுக்கு வேண்டிய குடும்பத்துல பொறந்தவன்கறதுக்காக அந்தப் பையனுக்கு என்னை முடிச்சு போடறீங்களாப்பா? நெஞ்சைத் தொட்டுச் சொல்லுங்க, அவன் வேற குடும்பத்துல பொறந்திருந்தா இந்த வரனை சிந்தியிருப்பீங்களா?'

உச்சந்தலையில் ஆணி அடித்தாற்போன்ற கேள்வி; கோபாலனிடம் பதில் இல்லை. ராஜாராமனின் பையனுக்கு படிப்பு ஏறவில்லை. 'தொழிலுக்கு வா' என்று அப்பா இழுத்தாலும் வளையவில்லை. கல்லாவில் அரைமணி நேரம் உட்கார்ந்தால் போதும், அடுத்த இரண்டு மணி நேரத்திற்கு சிகரெட் நாற்றம் அங்கே சுற்றிக் கொண்டிருக்கும். பட்டணத்து லாட்ஜில் ரெய்டு நடந்து எவளோ ஒருத்தியுடன் மாட்டியவனை போலீஸை சரிக்கட்டி வெளியே எடுக்க ராஜாராமனுடன் கோபாலனும் போயிருந்தார். பக்கத்து ஊர் கிளப்பிற்கு தினப்படி கப்பம் கட்டி சீட்டுக் கட்டை கலைத்து, பொழுதையும், தகப்பன் பணத்தையும் கரைக்கிறான் என்றும் கேள்வி. கல்யாணத்தை ஒரு சிகிச்சை மாதிரிதான் ராஜாராமன் நம்பியிருந்தார் என்பதும் தெரியும்.

வேறு ஏதாவது காரணம் சொல்லி தட்டிக் கழித்திருக்கலாம். ஆத்ம நண்பனிடம் நாசூக்கு எதற்கு என்று போட்டு உடைத்து விட்டார்.

அத்தனை வருட நட்பு நொறுங்கி விட்டது. கோபாலன் 'புத்தியை' காட்டி விட்டதாக ராஜாராமனுக்கு வருத்தம். அந்த வருத்தத்தில் வார்த்தைகள் கனத்து விட்டன. ஆத்திரத்தில் நாக்கில் நச்சுப் பாம்பு படமெடுத்து விட்டது.

'உன் பொண்ணு என்னடா ஒழுங்கு? பட்டணத்து ஹாஸ்டல்ல என்ன கூத்தடிச்சிட்டிருக்காளோ யாருக்குத் தெரியும்? கல்யாணம் நிச்சயமாகியிருந்தாலும், டாக்டர் கிட்ட காட்டி வயிறு சுத்தமாயிருக்கான்னு பாக்கணும்னுதான் நெனைச்சிட்டிருந்தேன்."

ராஜாராமனின் சட்டையை கோபாலன் பிடித்து விட்டார். இரண்டு பக்கமும் பொத்தான்கள் தெறித்தன. வேட்டி கிழிந்தது. முகத்தில் காயங்கள் கறுப்பு திட்டுகளாகின. அன்னியர்கள் குறுக்கில் புகுந்து பிரிக்கும் நிலை உண்டாயிற்று.

வருடாந்திர கோயில் விழா வந்ததும், ஆண்டாண்டு காலமாக ஏன் ஒரே ஆளுக்குப் பொறுப்பு என்று ராஜாராமன் குரல் எழுப்பினார். ஊர் மக்கள் சீட்டெழுதிப் போட்டு, அதிக சீட்டு வருபவருக்கே பொறுப்பு என்று முழங்கினார்.

கோபாலன் பெயரும், ராஜாராமன் பெயரும் காகிதச் சுருட்டல்களாகச் சேர்ந்தன. பிரித்து எண்ணப்பட்டன. ராஜாராமனுக்கு மதிப்பு உயர்ந்தது.

'எல்லாத்துக்கும் பணம் கொடுத்திருப்பான்' என்று பின்னால் கோபாலன் புழுங்கினார். தான் அவ்வளவு அசட்டையாக இருந்திருக்கக் கூடாது என்று மருகினார்.

ராஜாராமன் தன் வெற்றியை நிலைநாட்டிக் கொள்வது போல ஊரையே உசுப்பி விட்டார். தோரணங்கள் வௌவால்களாகத் தொங்கின. ஆர்ப்பாட்டங்களும் முழக்கங்களும் தெருக்களை அதிரடித்தன. முன் நடந்த எந்த வருஷத்தை விடவும் இந்த வருஷத் திருவிழா முத்திரை பதித்து விட வேண்டும் என்று ஆவேசம் அவருக்கு.

கோபாலன் குறுகினார். தெருவில் நடந்தாலே செம்புள்ளி கரும்புள்ளி குத்தப்பட்டது போல் ஓர் அவமானம். ஜன்னல் கதவை சாத்திவிட்டு அவரவரும் சிரிப்பது போல் ஒரு மயக்கம். உயிரையே தொலைத்து விட்ட ஒரு வேதனை.

இன்றைக்குப் பெருமான் புறப்பாடு. வீட்டோடு அடங்கி விட்டார். கால்களுக்கு உயிர் வந்தபோதெல்லாம் கடிவாளம் இட்டு விட்டார். அடக்கப்பட்ட கோபம் எல்லாம், பாவம் பிச்சையெடுக்க வந்தவன் மீது எரிமலைக் குழம்பாய்க் கொட்டி விட்டது.

வீட்டில் குழந்தைகள் யாரும் இல்லாதது ஒரு பெரிய ஆறுதலாயிருந்தது.

கண்ணாடியை அணிந்து பூஜையறையில் போய் சப்தத்துடன் அமர்ந்தார். கீதையைத் திறந்து கண்களை அதில் செலுத்தினார். பக்கங்கள் புரண்டதே தவிர பாராயணம் ஆகவில்லை.

அவருக்கு தூபம் போட்டு 'கயவாணிப்பய' ராஜாராமனை துவேஷமாகப் பேச நான்கைந்து பேர் மடித்துக் கட்டி வராமல் போகவில்லை. ஆனால் அவர்களை வைதேகி திண்ணையோடு திருப்பி விட்டாள்.

அடுப்படியில் சர்க்கரைப் பொங்கல் தயாராகி, பச்சைக் கற்பூரம் வாசம் பூஜையறைக்குள் புகுந்தது. பசு நெய்யில் முந்திரி புரளும் கமகமப்பு. உலர்ந்த திராட்சையும், பேரீச்சை இதழ்களும் பொங்கலில் இணையும் மணம்.

பெருமாளுக்கு நைவேத்யம் தயார்.

ஒலிபெருக்கிகளில் பிரபந்தம் ஒலிக்கத் துவங்கியது. நாதஸ்வரங்களும், தவில்களும் சுருதி சேர்த்தன.



"கத்தியை பிடிச்சா வெட்டும்.
கரண்டியை தொட்டா சுடும் என்று தெரியுது.
ஆனா கண்ட இடத்துக்கு போனா
**எய்ட்ஸ்** வருமுன்னு தெரியாதா".

இது இவனுக்கு மட்டுமில்லை.
உங்களுக்கும் தான்.

**எச்சரிக்கையுடன் இருப்போம்!**
**வருமுன் காப்போம்!!**




**தமிழ்நாடு எய்ட்ஸ்**
**கட்டுப்பாட்டு அமைப்பு,**
417, பாந்தியன் ரோடு, எழும்பூர்,
சென்னை - 600 008.
போன் : 8255467 / 8255261 / 8254917

மேலும் எங்களை அணுக: 24 மணிநேர ஹாட்லைன் தொலைபேசி எண்:
**8256882 / 8256864**

TNSACS/1006/97/ET

அலங்காரம் செய்யப்பட்டு பெருமான் பல்லக்கில் ஏறியிருப்பார். தீப்பந்தங்கள் முனுமுனுத்து எரிய ஆரம்பித்திருக்கும். பட்டாச்சாரியார் பெருமான் காலடியில் ஒண்டி உட்கார்ந்திருப்பார். 'கோவிந்தா, கோவிந்தா' என்று கோஷமிட்டு பதினாறு பேராகச் சேர்ந்து தோள் கொடுத்து பல்லக்கை உயர்த்தியிருப்பார்கள். பெருமான் மிதந்து மிதந்து நகர ஆரம்பித்திருப்பார்.

கோபாலனுக்கு எதுவும் ஓடவில்லை. கீதையை மூடினார். எழுந்து ஜன்னலை முகர்ந்தபடி வெளியே பார்த்தார்.

அக்கம் பக்கத்து வீடுகளில் வாசலுக்கு வந்து விட்டார்கள். பெருமாள், ஊர்வலத்தின் முதல் திருப்பத்திலேயே, இந்த வீதி வந்து விடும்.

கோபாலன் முற்றத்தில் இறங்கி கால்களை அலம்பிக் கொண்டார். முகத்தில் தண்ணீரை இறைத்துக் கொண்டார். சட்டையைத் துறந்தார். துண்டை இடுப்பில் இறுக்கினார்.

மரபீரோ திறந்து புதுப்பட்டுத் துணியை எடுத்தார். வருடா வருடம் பல்லக்கு கோபாலன் வீட்டு வாசலில் நிற்கும். புதிய பட்டாடை கோபாலன் கையால் 'எங்கப்பன் ரங்கன்' தோள் ஏறும். நெய் மிதக்கும் தித்திப்புப் பொங்கல் நைவேத்யமாகக் காட்டப்படும். அந்த வாசத்தில் பெருமாள் ரங்கனே 'பேஷ், பேஷ்' என்று தலையாட்டுவதாகக் கூட ஒரு பிரமை வரும். கற்பூரம் ஜோதியாக எரியும். பக்தர்கள் கன்னங்களில் தபதபவென்று போட்டுக் கொள்வார்கள். நெற்றி மேடு மண்ணில் படும்படி சாஷ்டாங்கமாக நமஸ்கரிப்பார்கள். தீர்த்தம்; சடாரி. வாழைத் தொன்னையில் மணக்க மணக்க கோபாலன் வீட்டு சர்க்கரைப் பொங்கல் பிரசாதம் விநியோகமாகும்.

சூடு பொறுக்க ஒரு வட்டத் தட்டில் வெண்கலப் பாத்திரம். பாத்திரத்தில் கம கமக்கும் பொங்கல். வைதேகி தயாரானாள். கோபாலன் பட்டுத் துணியுடன் வாசல் படி இறங்கினார்.

வீதி முனையில் பஜனை கோஷ்டி நுழைந்தது. ஜாலர் ஒலிக்க பச்சை மாமலை போல் மேனியனை ஆறேழு குரல்கள் ஒருங்கே பாடின. பஜனை கோஷ்டி நகர்ந்ததும், பெட்ரோமாக்ஸ் விளக்குகள். நாதஸ்வர சங்கீதம். தவில் மேளம்.

நாதஸ்வரத்தைத் தொடர்ந்து இரண்டு தீப் பந்தங்கள். வீதி முனை திரும்பியதும் பல்லக்கு தயங்கியது. அவசர அவசரமாகப் புகுந்து வைக்கப்பட்ட தாங்கிகளில் பல்லக்கு சற்று இளைப்பாறியது. பல்லக்கு சுமந்தவர்கள், ஆதாரத் துணியைத் தோள் மாற்றித் தயாரானார்கள்.

“ரங்கா... ரங்கா”

ஒருமித்த கோஷம். கற்பூரம் சுடர்விட்டது.

தீர்த்தம் அருந்தப்பட்டது. சடாரி அணிவிக்கப் பட்டது. ராஜாராமன் ஆணையிட்டதும், பல்லக்கு மறுபடி தோள் ஏறியது. புறப்பட்டது. ஓட்டமான பாவனையில் பல்லக்குத் தூக்கிகள் பாரத்தில் வேகம் எடுத்து நடந்தார்கள். இந்த வருஷம் கூட்டம் அதிகம் என்று தோன்றியது. பட்டுப் புடைவைகள் அதிகமாகச் சரசரத்தன. வீட்டுத் திண்ணைகளின் மேல் சிறுவர் சிறுமியர்களின் ஆதிக்கம்.

அடுத்த நிறுத்தம் கோபாலன் வீட்டு வாசலில்தான். கோபாலன் பட்டுத் துணியுடன் கைகளை உயரத் தூக்கி சேவித்தார்.

குழந்தைகள் ரங்கனைப் பூவால் அடித்தன. ரங்கன் மார்பில் பட்ட பூக்கள் தெறித்துக் கூட்டத்தில் விழுந்தன. கோபாலன் மார்பிலும் ரங்கன் விட்ட பூ பாணம் வந்து மோதியது. சிலிர்த்துப் போனார், கோபாலன்.

பல்லக்கு நிற்கப் போகிறது என்று நடு வீதிக்கு நகர்ந்தவர், அதன் வேகம் பார்த்து மிரண்டு பின்வாங்கினார்.

பல்லக்கு நிற்கவில்லை. அவர் வீட்டைத் தாண்டி, இன்னும் ஆறேழு வீடுகள் தாண்டிப் போய் நின்றது.

அவரைப் போலவே பல்லக்கு நிற்கும் என்ற எதிர்பார்ப்புடன் நடுவீதிக்குச் சென்றவர்கள் ஒருமிக்க மிரண்டு பின்வாங்கினார்கள். நெரிசல். கோபாலன் மேல் ஒரு கூட்டம் விழுந்து தெறித்தது. யாருடைய கையோ அவர் மார்பில் அழுந்தி ஆதாரம் தேடி அவர் தோளைப் பற்றியது. வியர்வைக் கசகசப்பு. பட்டுப் புடைவைகளின் தாமரை இலைத் தண்ணீர் போன்ற ஸ்பரிஸம்.

கோபாலனுக்கு எதுவுமே உறைக்கவில்லை. திரும்பிப் பார்த்தார். பல்லக்கின் பின்பாகம் தான் தெரிந்தது. பெருமாள் முதுகு காட்டி நின்றிருந்தார். கோபாலனுக்கு தடதடவென்று உடல் நடுங்கியது.

என்ன ஒரு திமிர் இருந்திருந்தால் பெருமாளை இங்கே நிறுத்தாமல் கொண்டு போயிருப்பான் அந்த ராஜாராமன்!

திகைப்பும், குரோதமும் கோபாலனை உலுக்கி எடுத்தன.

"ஐயோ... என்ன பாவம் பண்ணிட்டேன்.. ரங்கா... என்னை மன்னிச்சிரு..." என்று வைதேகியின் குரல் பதறி அவரைத் தொட்டது.

விருட்டென்று திரும்பிப் பார்த்தார்.

கூட்டம் நெறிபட்டதில் வைதேகி முன்னுக்குத் தள்ளப்பட்டு, அவள் காலடியில் உந்தப்பட்டு விழுந்த ஒரு பரதேசியின் முதுகை மிதித்து விட்ட பதற்றத்தில் வெளியே விழுந்த குரல்.

முகமெங்கும் அப்பிய புழுதியுடன் அவன் நிமிர்ந்தான்.

காலையில் கோபாலன் விரட்டிய அதே பரதேசிதான்!

கூட்டம் மோதியதில் அவர் கையில் பிடித்திருந்த பட்டாடை பிரிந்து விலகியதையே இப்போதுதான் உணர்ந்தார். பெருமாளுக்காக வைத்திருந்த பட்டாடை பரதேசியின் முதுகை மூடி விழுந்திருந்தது.

பரதேசி அவர் கால்களில் விழுந்தான்.

"கூட்டம் நெட்டித் தள்ளி விட்டுடிச்சி சாமி... தெரியாம விழுந்துட்டேன்... மன்னிச்சிடுங்க சாமீ..."

''அவனை ஒண்ணும் சொல்லாதீங்கோன்னா...'' என்று வைதேகி அவர் கை பிடித்து அழுத்தினாள்.

கோபாலனின் நெஞ்சுக்குள் பாறை இளகியது.

"எந்திரிப்பா..."

பரதேசி அவர் குரலின் மென்மையை நம்ப முடியாமல் எழுந்தான். பட்டுத்துணி அவன் தோளில் நின்று விட்டது.

"ஐயா... தெரியாம..."

"பரவால்லை, விடு... ஒம் பேரென்ன?"

''ரங்கன் சாமீ... எங்கம்மா இந்த சாமி பேரை எனக்கும் வச்சிருச்சி...''

பளீர், பளீர், பளீர் என்று சாட்டை நுனி தீண்டித் தீண்டி மீண்ட மாதிரி இருந்தது கோபாலனுக்கு.

நல்லதொரு ராகத்தைக் கேட்கும் போது கண்ணில் நீர் சுரக்கிற மாதிரி, பனிச்சிகரத்தின் மடியில் நிற்கும்போது மனம் விம்முகிற மாதிரி பரதேசியைப் பார்க்கப் பார்க்க உள்ளே ஏதோ உடைந்தது. நெஞ்சு நெகிழ்ந்தது. கருணை பீறிட்டது.

"ரங்கா ஆ..ஆ..ஆ...." என்று அரற்றினார்.

## நீரில் நிச்சயிக்கப்பட்ட திருமணம்...



ஜெர்மனி நாட்டைச் சேர்ந்த ஒரு தம்பதியின் திருமணம் நீரில்தான் நிச்சயிக்கப்பட்டது. ஒருமுறை உல்லாச பயணத்தின் போது தண்ணீரில் தவறி விழுந்து விட்ட பெண்ணை காப்பாற்றியவர், பின்பு காதல் மலர அது திருமணத்தில் முடிந்தது. தண்ணீரில் தங்கள் காதல் உருவானதால், தண்ணீரிலேயே தங்கள் திருமணத்தை நடத்தினர். ஆக்சிஜன் சிலிண்டர் சகிதம், ஒரு நீச்சல் குளத்தில் இறங்கி மோதிரம் மாற்றிக் கொண்டனர்!

– பாரீஸ் பார்த்தசாரதி

# நாவரசு



பிஞ்சு வயதுப் பிறைநிலா
நம்பிக்கை அரும்புகளின்
நறுமணச் சண்பகம்
அன்புக் குடும்பத்தின் ஆசைப்பிள்ளை

உயிரைக் காக்கும் மருத்துவம் படிக்கப்
பல்கலைக்கழகம் போன பிள்ளை
உயிரைக் காக்க ஒருவரும் இல்லை...

தில்லை இருந்தது; தெய்வம் இருந்தது;
பல்கலைக்கழகம் தலை நிமிர்ந்திருந்தது
'ராகிங்' என்ற கொடுங்கொலை
மிருகம்
ராட்சச வெறியுடன் பதுங்கியிருந்தது

சின்ன வயது மகன்
சின்னா பின்னமான கொடுமை
நிகழ்ந்தது

உறவும் நட்பும் மட்டுமா?
ஊரே அழுதது - நாடே அழுதது
என்றும், எங்கும், யாருக்கும்
இனி இது நேரவாகாது
என்பதோர் வைராக்கியம் எழுந்தது

கல்விக் கூடங்கள்
கயமை மாடங்கள் ஆகாதிருக்க
நாவரசுவின் உயிர்ப்பலி
எச்சரிக்கையை
நெருப்பு எழுத்துக்களால் எழுதுகிறது
இன்று அந்த இளங்கன்று
இல்லாமல் வருகிற முதல் பிறந்த நாள்
நட்சத்திரம் திருகியெறியப்பட்ட
வானம் போல்
நிழல் படிந்து கிடக்கின்றன
நேச நெஞ்சங்கள்

நிகழ்ந்த கொடூர வரலாற்றை
எதிர்காலத்தின் நெஞ்சில்
பொறித்து வைக்கிறோம்
கல்வெட்டாக -
நாளை வைகறைகள்
நலமுடன் விடிய...

வெட்கத்தால்
தலை கவிழ்ந்து கிடக்கிற
கல்வி உலகம்
அகப்பரிசோதனை செய்து
கொள்ளட்டும்

'ராகிங்' ஒழிப்புச் சட்டத்தை
நாட்டுக்கு அர்ப்பணித்த
நம் முதல்வர் - கலைஞரின் அரசுக்கு
நாவரசு பெயர் சொல்லி
வணக்கம் செலுத்துகிறோம்

தேறுதல் சொல்ல முடியாத
நாவரசு குடும்பத்துக்கு
ஆறுதல் ஏது? நெகிழ்ச்சியோடு
அரவணைத்துக் கொள்கிறோம்

தம்பி! நாவரசு!
வீழ்ந்த மலரே
நீ
இன்றும் என்றும்
நின்று மணப்பது
எங்கள் நெஞ்சத்தில்

— சிற்பி பாலசுப்பிரமணியம்

('நாவரசு' நூலின் தொகுப்பாசிரி
யரான இவர் எழுதிய முன்னுரைதான்
இக் கவிதை)

நாவரசு / பொன் நாவரசு
அறக்கட்டளை வெளியீடு;
43, இரண்டாவது மெயின் ரோடு,
கஸ்தூரிபா நகர், அடையாறு,
சென்னை - 600 020.

* வாசக புத்துணர்ச்சி!

● இரா. சந்திரசேகரன், விருதுநகர்.

*? தமிழ் – ஆங்கில தட்டச்சு இயந்திரம் தமிழ் மொழி வளர்ச்சிக்கு உண்மையிலேயே வழி கோலுமா?*

! இருமொழி கம்ப்யூட்டர் வசதி வந்த பிறகு டைப்ரைட்டரிலெல்லாம் காசு போடுவது வேஸ்ட் என்பது ஒருபுறமிருக்க, இதனாலெல்லாம் தமிழ் வளர்ந்து விடாது. அதற்கு தூய தமிழ்ப் பார்வை நீங்கி, பரந்த மனப்பான்மை வர வேண்டும்.

● ஆர். முருகானந்தம், எஸ். மாரியூர்.

*? 'பதவி போனாலும் தொடர்ந்து கட்சிப் பணியை ஆற்றுவேன்' என்று குமரிஅனந்தன் கூறியுள்ளாரே?*

! த.மா.காவுக்குத் தாவி விடுவார் என்று வதந்தி – அது உண்மையானால் 'காலம் கடந்த ஞானோதயம்! என்றைக்கோ செய்திருக்க வேண்டிய காரியம்.

● டி. பசுபதி, ஊஞ்சவேலாம்பட்டி.

*? ஸ்ரீநாத் இல்லாத குறையை அபய் குருவில்லா நிரப்புவாரா?*

! ஸ்ரீநாத்தை 'ஓவராக' வேலை வாங்கி ரிப்பேராக்கி விட்டார்கள், பாவம்! திரும்பி வந்தாலும் முன்னர் இருந்த தீவிரம் இருக்குமா, சந்தேகம்... என்ன கேட்டீர்கள்?... ஸ்ரீநாத் இல்லாத குறையை இட்டு நிரப்ப குருவில்லா இன்னும் ரொம்ப தூரம் போக வேண்டும். ஆனால், ஏற்கெனவே 'ஓவர் ஏஜ்', அதனால் 'நோ சான்ஸ்'!

● திருமூர்த்தி பொய்யாமணி, திருச்சி – 12.

*? என்ன கேட்கறதுனே தெரியலை... உங்க இஷ்டத்துக்கு ஏதாவது சொல்லுங்களேன்...?*

! கார்டு விலை ஏறப் போவுது... இப்படியா வேஸ்ட் பண்றது!

* தூற்றிக் கொண்டவர்!



* டு லேட்!

● வசந்தாகாந்த், கருப்பம்புலம்.

*? 'தமிழக பட்ஜெட் நிழல் தரும் ஆலமரம்' என்கிறார் டாக்டர் ராமதாஸ்; 'முக்கனியையும் சேர்த்து வழங்கியிருக்கிறார்' என்கிறார் தமிழக வர்த்தக கழகத் தலைவர். உங்கள் பார்வையில்...?*

! ஏழைகளை வாட்டாது; அந்த வரையில் ஓ.கே.

● வி. சத்தியப்ரியன், சென்னை – 15.

*? திரைப்பட பின்னணிப் பாடகர் சாகுல் ஹமீது மறைவு குறித்து...?*

! ஹமீது சினிமாவுக்கு வரும் முன்பே அவர் குரலில் மயங்கி, கிறங்கியிருக்கிறேன். ...ன் டி.வி.யில் ஒரு முறை அவர் பேட்டி. 'இத்தனை எளிமையா? அடக்கமா?' என்று ஆச்சர்யப்பட்டேன். மேற்கொண்டு கேட்காதீர்கள்... உடைந்து விடுவேன்.

● சூர்யநிலா, சேலம் – 2.

*? மீனவர்களுக்கு வாக்கி டாக்கி கொடுக்கப்படுமாமே... பலனிருக்குமா...?*

! முதல்வர் நினைவு வைத்துக் கொண்டதற்கு நன்றி. வழக்கமாகப் புயல் அடித்து, மீனவர்கள் காணாமல் போகும்/இறக்கும் சமயத்தில் பேசப்பட்டு, கிடப்பில் போடப்படும் விஷயம். கேரள அரசு கடலிலுள்ள மீனவர்களுக்குத் தரையிலுள்ளவர்கள்

# 'நான் பிரதமரானது விபத்து!' என்கிறாரே கௌடா?

தகவல் அனுப்பவும், திசை மற்றும் மணிகாட்டுவதோடு, மீன்கள் உள்ள பகுதியைக் காட்டும் கருவியையே கொடுக்க ஆரம்பித்துவிட்டதையும், கவனத்தில் கொள்ள வேண்டும்.

● ஆர்.கே.எஸ். சமுககனி, டி. மாரியூர்.

? 'காற்றுள்ளபோதே தூற்றிக் கொள்ளத்தான் சிலர் என்னைத் துதி பாடினர். தோல்வி வந்தவுடன் அவர்களது சாயம் வெளுத்து விட்டது' என்று ஜெயலலிதா அ.தி.மு.க.வினருக்குக் கடிதம் எழுதியது பற்றி...?

! 'ஜெ'யும் காற்றுள்ளபோதே தூற்றிக் கொண்டவர்தான்; அவர் சாயமும்தான் வெளுத்து விட்டது.

● அ. கிருஷ்ணகுமார், புளியம்பட்டி.

? சம்பளத்தை உயர்த்தினால் ஊழல் நடக்காது என்கிறார்களே ரேஷன் ஊழியர்கள்?

! சம்பளத்தை உயர்த்துங்கள் என்று கேட்கட்டும்; போராடட்டும். ஆனால் அதனால்தான் ஊழல் பண்ணுகிறோம் என்கிற ஒப்புதல் வாக்குமூலம் கண்டனத்துக்குரியது.



• அடக்கம்!



• விமர்சு யாருக்கு!



• ஓவர் வேலை...



• ...ஓவர் வயது!

● இரா. திலீப், திருச்சி – 14.

? ஜனரஞ்சக எழுத்துக்குப் பரிசு அளிக்க விரும்பினால் இன்று அப்பரிசை யாருக்கு அளிப்பீர்?

! சுஜாதாதான்! எந்தப் பொருள் பற்றியும் வாசகரைக் கவரும்விதமாக, புத்துணர்ச்சியுடன் எழுதுகிறாரே!

● எம். அசோக்ராஜா,

அரவக்குறிச்சிப்பட்டி.

? 'கடவுளைத் தவிர வேறு எந்த சக்தியாலும் என்னைப் பதவியிலிருந்து விரட்ட முடியாது' என்கிறாரே கௌடா?

! கேசரியைக் கடவுளாக நினைக்கிறாரோ என்னவோ...!

● என். முருகேஷ், மங்கைநல்லூர். ❒

? பான் மசாலா விற்பனையில் சாதனை புரிந்ததற்காக ஒரு தொழிலதிபருக்குப் பாராட்டு விழா – அதில் மத்திய அமைச்சர் கலந்து கொள்கிறார்! – இது சரியா?

! பான் மசாலா லாஹிரிப் பொருள் என்பதால் மிகவும் தப்புதாங்க! ஆனால் இந்தத் தார்மீக குடைசலெல்லாம் இக்காலத்தில் யாருக்குங்க இருக்கு?!

● கு. கணேசன், காட்டாங்குளத்தூர்.

? 'என் மீது அன்புடைய திருநாவுக்கரசை தீய சக்திகள் ஒருக்காலும் கட்சியிலிருந்து பிரித்துவிட முடியாது' என்ற ஜெயலலிதாவின் நம்பிக்கை குறித்து...?

! யப்பா! பழைய சண்டைகளையெல்லாம் ஒருமுறை நினைத்துப் பார்த்தேன்... புல்லரிக்குது இந்த ஸ்டேட்மெண்ட்!

● ஸ்ரீவித்யா காளிதாஸ்,

? இந்து கோவில்களில், மதநம்பிக்கை உள்ளவர்களை அறங்காவலர்களாக நியமிக்க வேண்டும் என்று ஹை கோர்ட் தீர்ப்பளித்துள்ளதே?

! அர்த்தமுள்ளது. ஆனால் மதநம்பிக்கை மட்டுமே தகுதியாகி விடக்கூடாது. நேர்மையும் அவசியம்.

● எல்.எம். அபிநாட்சயா, மதுரை – 10.

? பாராளுமன்றக் கூட்டத்தில் பிரதமர், ஜனாதிபதி உரையை 'கவர்னர் உரை' என்று குறிப்பிட்டு நன்றி கூறியிருக்கிறாரே...?

! 'அவர் இன்னும் கர்நாடக முதல்வராகத்தான் செயல்படுகிறார்; பிரதமராக அல்ல...' என்ற குற்றச்சாட்டை அவரே நிரூபித்து விட்டார்.

● ப. சங்கர், திருப்பூர்.

? கட்சியின் கொள்கைக்காக வாக்களிப்பது சிறந்ததா? வேட்பாளரின் குணத்துக்காக வாக்களிப்பது சிறந்ததா?

! நமது சொந்த புத்தியை உபயோகித்து, இரண்டையும் எடைபோட்டுப் பொருத்திப் பார்த்து, சாதக பாதகங்களை ஆராய்ந்து வாக்களிப்பதே சிறந்தது.

● பூங்குழலி, பூதபுரி.

? 'நான் பிரதமரானது வெறும் விபத்துதான்' என்று தேவேகௌடா கூறியுள்ளாரே...?

! அவருக்கு விபத்தா? நாட்டுக்கு விபத்தா என்பதுதான் கேள்வி!

❒ ரூ. 25 பரிசு பெறுபவர் :
என். முருகேஷ்,
கீழ வீதி, பெருஞ்சேரி,
மங்கைநல்லூர் அஞ்சல்,
மயிலாடுதுறை தாலுகா - 609 404.

21

# பிரபஞ்சன்

**கா**லை பத்து மணி வாக்கில் பிலோமினா அக்காள், தேவகியைப் பார்க்க வருவதாகச் சொல்லி விட்டிருந்தாள். கல்யாணம் பேசத்தான். ஜனனி, பிந்துவுக்கும், ஜானு மாமிக்கும் சொல்லி விட்டிருந்தாள். பிந்துவும், மாமியும் ஒன்பதே முக்காலுக்கு ஆஜர் ஆகி இருந்தார்கள். தேவகியின் முகத்தில் சுரத்தில்லை. 'என்ன கல்யாணமோ, என்ன ஆசாரமோ' என்றாள். என்றாலும் சூழ்நிலை, அவளை உந்தித் தள்ளி, சம்மதிக்க வைத்து விட்டது. கோண்டுவை அவள் மலை போல நம்பி இருந்தாள். அவனோ, மிக இங்கிதமாகச் சொல்லிவிட்டுப் போய் விட்டான்.

"அக்கா... ஆற்றுப் போக்கை எதிர்த்து நீச்சல் அடிக்காதே. கை ஓஞ்சி போயிடும். பெண்ணுக்குப் பிடிச்ச மாப்பிள்ளையையே பண்ணி வை. நீ பிடிச்ச முயலுக்கு மூணே கால்னு நிக்காதே. வரட்டுப் பிடிவாதம், நல்லதைப் பண்ணாது. மாமாவையும் சீக்கிரமா அனுப்பி வைச்சுட்டே... கடைசிக் காலத்துல, உனக்கு உன் மகதான் இருப்பா. அவ மனம் கோணாமல் நடந்துக்கோ..." என்று விட்டு ரயில் ஏறினான் கோண்டு.

தேவகியை, ஆனாலும் உலகமே ஒதுக்கித்தான் தள்ளுகிறது. இன்னிக்குக் காலையில் கூட, கேவலம் ஒரு போலீஸ்காரன் அவளை நெட்டித் தள்ளினான். என்ன காரணம்? எல்லாம் தலை எழுத்து. காலனிக்குப் பக்கத்தில், எவளோ ஒரு குட்டி நடிகை வீடு கட்டிக் கொண்டு, புதுக் கல்யாணமும் பண்ணிக் கொண்டு வந்திருக்கிறாளாம். யாரோ அவளிடம், காலனி ஆஞ்சநேயர் மகா வரப்ரசாதி என்று சொல்லப் போக, அவள் இன்றைக்குக் காலமே, கோயிலுக்கு வந்து விட்டாள். கூடவே, நடிகன் ஒருத்தன், தடியனாட்டம் உடன் வந்தானாம். கூட்டம் சேர்ந்து விட்டது. காலனியில் இருக்கிற நண்டுகள், குஞ்சுகள் எல்லாமும் சேர்ந்து ஒரே கலாட்டா. போலீஸ் வேறு வந்து விட்டது. விஷயத்தின் தீவிரத் தன்மையை அறியாத தேவகி, வழக்கமாகக் காலை தரிசனத்துக்குப் போயிருக்கிறாள். ஒரு போலீஸ்காரன் (கட்டாயம் அவன் கட்டையிலேதான் போவான்). "ஏ... அப்படி நில்லு. தள்ளிப் போ" என்று தள்ளி விட்டான். தேவகி, விழ இருந்தாள். ஆடிட்டர் சங்கரன், அவளைத் தாங்கிப் பிடித்துக் கொண்டார். அது வேறு எரிச்சலைக் கிளப்பியது, தேவகிக்கு. மடி பாழாகி விட்டது.



"என்ன கர்மம் நடக்கிறது, கோவி லிலே... ஓய் சங்கரய்யர்... எவளோ ஒரு மினுக்கிக்கு ரெண்டாம் கல்யா ணமோ, என்ன இழவோ நடந் தாச்சுன்னு, இங்க என்ன கலாட்டா? காலனிக்குள்ளே, அந்தச் சிறுக்கிக்கு என்ன பட்டா போட்டுக் கொடுத் திருக்கா?" என்று இரைந்தாள்





தேவகி.

சங்கரய்யர், இதை ரசிக்கும்படியான நிலை யில் இல்லை. பத்திரிகைக்காரர்கள், போட் டோகிராபர்கள் எல்லோரும் வந்திருக்கிறார் கள். நாளைக்குப் பத்திரிகையில் சேதி வரப் போகிறது. ஆஞ்சநேயருக்கு எவ்வளவு பெரிய பப்ளிசிட்டி, கௌரவம்? இது தெரியாமல், இந்தக் கிழம் என்னமாவது செய்து தொலைத் தால் என்ன பண்ணுவது?

"உஸ்... பெரியவாள்ளாம் வந்திருக்கா. சப்தம் போடாதீங்கோ" என்று அவளைக் கூட்டத்தை விட்டே, வெளியே கொண்டு போய் விட்டார் அவர். காலை தரிசனம் ஆகா தது வேறு அவளுக்கு எரிச்சல்.

சொன்னபடி பிலோமினா அக்கா, சரியா கப் பத்து அடிக்கும்போது, ஆட்டோவில் வந்து இறங்கினாள். ரோஸ் நிறத்தில், நீலப் பூ போட்ட சூரிதார் அணிந்திருந்தாள். நீலவண் ணத்தில் துப்பட்டா அணிந்திருந்தாள். தேவகி யிடம் வந்து 'வணக்கம்' என்றாள். ஹால், நாற் காலியில் கம்பீரமாக அமர்ந்தாள். தேவகியின் சார்பாக, பிந்து, வந்தவர்களுக்கு (கடையில் வாங்கின பால்கோவா, முந்திரிப் பருப்பு) வழங்கி, காப்பி போட்டுத் தந்தாள். பிலோ மினா அக்கா சொன்னாள்.

"கல்யாணத்தை ரொம்பச் சுருக்கமாகவே பண்ணிடலாம். பதிவுத் திருமணம்தான். அது வும், பத்துப் பேர் முன்னிலையில். அப்புறம், தேர்வு செய்த இருநூறு பேருக்கு மட்டும் அழைப்பு வைத்து, வரவேற்பு. உங்கள் சம்மதம் வேணும்."

க்கள்

நாளையும் மலரும்

தேவகி சொன்னாள்.

"எங்களுக்கு இருக்கிறது. ஒற்றைக்கு ஒரு பெண். அதுக்குச் சம்பிரமமாக நடத்தினால் அல்லவோ, கௌரவமாக இருக்கும்."

"சம்பிரமம் என்றால் என்ன, அம்மா? உங்க சொந்தக்காரர்கள் எத்தனை பேர் இருப்பார் கள்."

"ரொம்ப முக்கியமாக ஐம்பது பேர் இருப்பார்கள்."

"அவர்களை எல்லாம் கூப்பிடுவோம். எங் கள் பக்கம் ஐம்பது பேர். அப்புறம் என்ன?"

"சம்பிரதாயம் எல்லாம் இல்லாமலா?"

ஜானு மாமி சொன்னாள்.

"சம்பிரதாயம் என்ன, தேவகி. பெண், கிறிஸ்துவப் பையனைக் கட்டிக்கப் போறா. உன் சம்பிரதாயம், அவனுக்குச் சங்கடமா இருக்கும். அவங்க சம்பிரதாயப்படி 'சர்ச்சில' கல்யாணம் பண்ணா, உன் சொந்த பந்தங் களுக்குச் சங்கடமா இருக்கும். அதனால, பதிவுத் திருமணத்துல யாருக்கும் சங்கடம் இருக்காது. அதை முடிப்போம். அப்புறம், 'செட்டா' ஒரு வரவேற்பு. அழகா இருக்குமே..."

தேவகி, அரை மனசோடு சொன்னாள்.

"எங்க சொந்தக்காரா என்ன சொல்ல மாட்டா?"

"சொந்தக்காராளை விடுடி.. கழுகுன்னா அவைகள். கழுகுகளுக்கு உயர உயரப் பறந்தா லும், இறைச்சித் துண்டு கிடைக்குமான்னுதான் பிரக்ஞை. அது மாதிரி, நீ ஊரை அழைச்சு நாலு நாள் கல்யாணம் பண்ணினாலும், என்ன மாவது குறைசொல்லியே தீரும். குறை ஜன்மங் கள். மாப்பிள்ளைக்கு காது ஒட்டைங்கும். சாம்பார்லே, ஒரு கொட்டைப் புளி தூக்கல்னு சொல்லும். உனக்கு எத்தனை குழந்தை. ஒண்ணே ஒண்ணு. அப்புறம் என்னத்துக்குத் தயக்கம்? நீ தனி மனுஷி. பெரிசா பண்ண முடியுமோ, உன்னாலே. மாப்பிள்ளை வீட்டுக் காரா சொல்ற மாதிரி நடந்துக்கோ...'

"முக்கியமா..." என்று எதையோ சொல்ல வந்தாள், தேவகி.

பிலோமினா அக்கா சொன்னாள்.

"கல்யாணத்துக்கு முக்கியம், ரெண்டு பேர்தான், அம்மா. ஒருத்தன் மாப்பிள்ளை. ஒருத்தி பெண். மற்றவங்க எல்லாம், ஆறாவது விரல்கள்தான்."

ஜானு மாமி சிரித்தாள்.

பிலோமினா, மாமியை நெற்றியில் புருவம் ஏறப் பார்த்துச் சொன்னாள்.

"ஒரு கட்டத்துக்கு மேலே கல்யாணம், தனி மனுஷர்களோட 'பெர்சனல்' மேட்டராயிடும். இதிலே தலையிடறது அநாகரிகமா மாறிடும். மாப்பிள்ளை, பெண் பார்க்கிறது தரகர் வேலை. தகப்பனார் வேலையில்லைன்னு ஆயிடும்..."

எல்லோரும் சேர்ந்து, தேவகியை கரைத்து. சம்மதம் சொல்ல வைத்தார்கள்.

"நாங்க பேசிக்கிட்டு இருக்கோம்... பெண், பேசாமல் இருந்தா எப்படி?" என்று ஜனனி யைக் கேட்டாள், பிலோமினா.

"நான் சொல்ல என்ன இருக்கு. நீங்க சொல்றது சரி. எனக்குச் சம்மதம்."

அடுத்த நாளே, பதிவாளர் அலுவலகம் சென்று அறிவிப்புப் போடுவது. கெடு முடிந்த பிறகு, கல்யாண வரவேற்பு என்று முடிவா யிற்று.

பிந்து கேட்டாள்.

"வரவேற்பு, அழைப்பு, சாப்பாடு, மண்ட பச் செலவெல்லாம் எப்படி? யார் பண்றது?" பிலோமினா அக்காள் சொன்னாள்.

"இரண்டு பேர் சமாசாரம். இரண்டு பேருமே, செலவைச் சரிசமமா பிரிச்சுக்கு வோம்."

"நியாயமான வார்த்தை" என்றாள் ஜானு மாமி.

அப்படியே முடிவாயிற்று. பிலோமினா அக்காள் போன பிறகு, தேவகி சொன்னாள்.

"இதெல்லாம் கல்யாணத்துல சேர்த்தியா? ஏதோ, காமா சோமான்னு. கத்தரிக்காய் வியா பாரமாட்டம் இருக்கு."

அந்தப் பெண்கள் விடுதியின் காப்பா ளர் முன், வள்ளியும், சண்முகமும் நின்றார்கள். வள்ளி, வீட்டை விட்டு வெளியேறுவது என் கிற முடிவை, சண்முகம் முதலில் ஏற்கவில்லை. "இது சரி இல்லை" என்றான். "இதனால், விரி சல் பெரிதாகுமே இல்லாமல், குறையாது" என் றும் சொன்னான்.

வள்ளியோ பிடிவாதமாகச் சொன்னாள்.

"இல்லை சண்முகம். மனசுக்குள்ளே வருத் தமும், கோபமும் துவேஷமுமா ரெண்டு பேர் ஒரு கூரைக்கும் கீழே இருக்க முடியாது. அத னாலே மனசு மேலும் குழம்பும். காயம் படும். மனசுக்குள்ளே விகாரம் புகுந்தாச்சுன்னா, அவர் செய்யறதெல்லாம் எனக்கு அநியாயமா படும். அவருக்கும் மோசமாத் தெரியும். விலகி, கண் மறைவா கொஞ்ச நாள் இருக்கப் போறேன். என்னைப் பற்றி அவருக்கு ஒரு தெளிவு ஏற்படும். எனக்கும் கூட. நான் அவரை முழுக்க வெறுக்கலை, சண்முகம். நிறைய நல்ல குணங்கள் உள்ளவர் அவர். சின்னச் சின்ன அசிங்கமான பலவீனம். அது போயிட்டா அருமையான மனுஷர். அவரு டைய அருமை வெளிப்பட நான் 'சான்ஸ்' கொடுத்து ஆகணும். அவரை நான் மீட்டு எடுக்கணும். அது வரைக்கும் நான் தனியா இருக்கறதுதான் சரி. ஒரு சகோதரனா, எனக்கு நீங்க உதவி செய்யணும். எனக்கு சிநேகிதர்கள் யாரும் இல்லை."

வள்ளியின் கோரிக்கையைச் சிரம் மேற் கொண்டான், சண்முகம். தன் வண்டியை



## தேரோடும் மதுரையிலே
## பார்புகழ் விழாவைக்
## கண்டு மகிழ

# சித்திரை திருவிழா.



## 11.4.97 முதல் 23.4.97 வரை

மீனாட்சி-சுந்தரேசுவரர் திருமணக் கோலாகலம்.
தெருக்களிலே அலங்காரத் தேர் ஊர்வலம். சித்திரைத் திருவிழா.
வைகையாற்றின் கரையில் கள்ளழகர் பெருமாள் தங்கக் குதிரை மீது பவனி.
கலை நிகழ்ச்சிகள் ஒலி - ஒளிக்காட்சிகள்... மறையாத மகிழ்வு நினைவுகள்.
**மனம் மகிழ மதுரை சித்திரை திருவிழாவைக் கண்டுகளியுங்கள்.**
விவரங்களுக்கு அணுகவும்: சுற்றுலா அலுவலர் - மதுரை - 0452-34757

உங்கள் சித்திரைத் திருவிழா பயணத்துக்கு உதவிட "தமிழ் நாடு சுற்றுலா வளர்ச்சி கழகம்" (TTDC), தங்குமிடங்கள், குழுப்பயண ஏற்பாடுகள், விடுதிகள், சொகுசு வாகனங்கள் - அனைத்தையும் குறைந்த செலவில் நிறைவாக அளிப்பது தமிழ் நாடு சுற்றுலா வளர்ச்சி கழகம். தொலை பேசி: 582916 / 560294
Fax : 044-561385 சென்னை



**சுற்றுலாத் துறை, தமிழ் நாடு அரசு**

சென்னை - 600 015. தொலைபேசி : 4320949 / 4321694 / 4321862

DIPR / 216 / DIS / 97

தமிழ் நாடு - இந்தியாவின் எழில்மிகு காட்சிப் பெட்டகம்

தங்கியிருந்த ஹோட்டலுக்கு வந்திருந்த ஒரு குழந்தையைக் கொஞ்சுகிறார் பாம்பாம்...



பாம்பாம் பிகிலோ. ஆறு அடி மூன்று அங்குல உயரம். எடை 160 கிலோ. இந்த WWF மல்யுத்த மலைக்கு வயது முப்பத்தைந்து. இன்னும் திருமணம் ஆகவில்லை. அவரைத் தனியாகச் சந்தித்துப் பேசினோம்...

''எதற்காக மல்யுத்தத்தைத் தேர்ந்தெடுத்தீர்கள்?''

# "என்னோடு மோதிப் பாருங்கள்!"

''இதில் கிடைக்கிற அபரிமிதமான பணம். அதற்காகவே மல்யுத்தத்துக்கு என்னைத் தயார் படுத்திக் கொண்டேன். எப்படித் தெரியுமா? தினம் ஐந்து மணி நேரம் ஜிம்முக்குப் போய் கடும் பயிற்சி. மல்யுத்தத்துக்கு ஊளைச் சதை உதவாது. முறுக்கேறிய வலுவான உடம்பு வேண்டும். அப்போதுதான் எதிராளியை அடிக்க முடியும். அவன் கொடுக்கிற உதையைத் தாங்கிக் கொள்ள முடியும்.''

''நிறைய அடி படுமே?''

''வருஷத்தில் குறைந்த பட்சம் முந்நூறு நாட்கள் மல்யுத்தம் செய்கிறேன். எனவே என் உடம்பில் அடிபட்டு ஆபரேஷன் செய்யாத, தையல் போடாத இடம் பாக்கியில்லை!'' பகபக வென்று சிரிக்கிறார்.

மேல் வரிசையில் ஒரு பல்லைக் காணோம். ஒரு சக வீரரின் பெயரைச் சொல்லி, ''அவர் கொடுத்த குத்தில், பல் பறந்து போனது! எனக்குக் கிடைக்கிற பணத்துடன் ஒப்பிடுகிறபோது, இது போன்ற சிரமங்கள் எல்லாம் தூசு!''

''என்ன சாப்பிடுவீர்கள்?''

''வலுவூட்டும் எதுவும். சிக்கன் ரொம்பப் பிடிக்கும். சாலட்களை ஒரு வெட்டு வெட்டுவேன். ஃபைபர் சத்து, கார்போ ஹைடிரேட், புரொட்டின் அதிகம் உள்ள உணவுகள்தான் அதிகம் சாப்பிடுவேன்.''

''வெற்றி பெறும் போது உங்கள் மன நிலை எப்படி இருக்கும்?''

''யா... ஐ ஃபீல் வெரி ஹாப்பி!''

''தோல்வியடையும் போது?''

''நோ... ஐ டோன்ட் கேர்.''

''நீங்கள் போடுகிற மல்யுத்தம் நிஜமான மோதல் அல்ல; செட் அப் என்று ஒரு தரப்பினர் கருதுகிறார்களே!''

''நீங்கள் அப்படி நினைத்தால் என்னுடன் வந்து மோதிப் பாருங்கள். உண்மை புரியும்!''

சந்திப்பு : கௌதம் ராம்

எடுத்துக் கொண்டு அலைந்தான். பல பெண்கள் விடுதியைச் சென்று பார்வை இட்டான். வள்ளியும் இந்தத் தேடலில் அவனுடன் கலந்து கொண்டாள். சுமாரான வசதியுள்ள இடம் என்றால், வாடகை அதிகமாக இருந்தது. நிறைய விடுதிகளில், அற்பத்தனமான விதிமுறைகள் இருந்தன. ஒரு விடுதி வார்டன் சொன்னாள்.

"சாயங்காலம் ஏழு மணிக்குள் திரும்பிடணும். அதற்கு மேல், ஒரு நிமிஷமானாலும் நாங்கள் அனுமதிக்க மாட்டோம். எங்கள் விடுதி, நற்பண்புக்குப் பெயர் பெற்றது."

"அதுக்கு மேல், ஏழு மணிக்கு மேல் என்ன ஆகும் என்று நினைக்கிறீர்கள்?"

வார்டன் ஒரு மாதிரியாகப் பார்த்துக் கொண்டு சொன்னாள்.

"ஏதானும் தப்பு நடந்தா யார் பொறுப்பு?"

"நீங்கள் சொல்கிற தப்பு, ஆறு மணிக்கோ, மத்தியானத்திலோ நடக்காதா? நடக்கச் சாத்தியம் இல்லையா?"

அந்த அனுபவத்துடன், இந்தக் கண்ணாடி அணிந்த வார்டன் அம்மணி முன் நின்றார்கள் இருவரும்.

"மேடம், காலையில நான் சொன்னது, இந்த மேடத்துக்குத்தான். பெயர் வள்ளி. மிஸஸ் வள்ளி. இவங்க கணவர் கொஞ்ச காலம், வெளிநாடு போகிறார். இவங்களுக்கு, இந்த ஊரில் வேலை. ஆதரவாளர்கள் இல்லை. அதனால்தான்."

அந்த அம்மாள், சண்முகத்திடம் கேட்டாள்.

"நீங்கள் யார்? இவங்களுக்கு என்ன உறவு?"

"என் கம்பெனியில் இவர் பணி செய்கிறார். எனக்கு நண்பர். இவருடைய சுகதுக்கங்களில், ஒரு நண்பர் என்கிற முறையில் எனக்குப் பங்கு உண்டு."

"நீங்கள் சொன்ன தகவல்களை நான் நம்பறேன்."

அந்த அம்மாள் கொடுத்த விண்ணப்பத்தைப் பூர்த்தி செய்தாள் வள்ளி. கேட்ட முன்பணம் கொடுத்தான்.

"எப்போ விடுதிக்கு வர்றேம்மா?"

"இன்னிக்குச் சாயங்காலம் அல்லது காலையில்."

அவர்கள் சென்று அறையைப் பார்த்தார்

கள். சின்ன அறை. அதிர்ஷ்டவசமாக ஒரு ஜன்னல் இருந்தது. அதன் வழியாக, தோட்டத்துத் தென்னை தெரிந்தது. வெட்டி எடுத்த மாதிரி, ஒரு துண்டு ஆகாயம், நீலத் துண்டைக் காயவைத்தது மாதிரி. பெஞ்சு மேல் நிற்கிற 'மக்குப் பையன்' மாதிரி, தென்னை நின்றது.

''புறாக்கூண்டு மாதிரி, இது மனிதக் கூண்டோ?'' என்றான் சண்முகம்.

''இது போதும், சண்முகம், சார். மனிதன் அரண்மனையிலும் வாழலாம். அறையிலும் வாழலாம். மனசைப் பொறுத்ததுதான் மனை.''

வெளியே வந்தார்கள். வார்டன் அம்மா சொன்னாள்.

''பெட்ஷீட், தலையணை, போர்வை, தட்டு, தம்ளர் கட்டாயம் நீங்களே வாங்கிக் கொள்ளணும்.''

சண்முகம், வள்ளியைக் காரில் ஏற்றிக் கொண்டு கடைத்தெருவுக்கு வந்தான். சிவப்பு மஞ்சள் கோடு போட்ட பவானி ஜமக்காளம், தலையணை, போர்வை எல்லாம் வாங்கினார்கள்.

நகரில் நல்ல காப்பி கிடைக்கிற உணவு விடுதியில், தெருவில் காரில் இருந்தபடியே, காப்பிக்குச் சொன்னான் சண்முகம்.

''மிஸ்டர் அர்த்தநாரி, நீங்கள் விடுதியில் தங்குவதை எப்படி எடுத்துக் கொண்டார்?''

காப்பியை விழுங்கியபடி வள்ளி சொன்னாள்.

''கஷ்டமாத்தான் இருக்கும். ஒரு ஆம்பிளைக்கு, ஒரு கணவருக்கு இந்த மாதிரி அனுபவம் ஏற்படறது, புதுசு இல்லையா? சமூகத்துல இந்த வழக்கம் இல்லையே. அதனாலே, அதிர்ச்சி இருக்கும். எனக்கும் கூட சந்தோஷமா என்ன? ரொம்ப சங்கடமாத்தான் இருக்கு. முதல்ல, கோபப்பட்டார். அப்புறம், ஓய்ந்து கேட்டுக்கிட்டார். கடைசியிலே, இந்தப் பரீட்சைக்கு ஒப்புக்கறேன்னு சொன்னார்.''

''என்னைப் பற்றி அப்புறம், ஏதும் பேசினாரா?''

''இல்லை. அவர் ஏதோ கோபத்தில அந்த வார்த்தைகளைச் சொன்னார். அதில் உண்மை இருக்காதுன்னு அவருக்கே தெரியுமே... அதனாலே, அப்புறம், அதைப் பற்றிப் பேசலை. இப்படித் தப்பா பேசிட்டோமேன்னு, அவருக்கு வருத்தம்தான். பாவம், சண்முகம் சார். பெண்ணை, இம்சைப்படுத்தணும்னா, அவளோட நடத்தையைத்தான் சொல்ல முடிகிறது. ஆண்களாலே? அதனால்தானே, பெண், ஒடுங்கிப் போயிடறா? இது ஆம்பிளைப் புத்தி. என்ன பண்ணலாம் சொல்லுங்கோ...''

காப்பியும் சற்றே கசந்தது.

''அவருக்கு, அவர் காரியங்கள் சரின்னு படுதா?''

''எப்படிப் படும்? படாது. பொது ஒழுக்கத்துக்கு விரோதமான எதுவும், நியாயத்துக்குப் புறம்பான எதுவும், செய்கிறவன் மனத்தை வதை பண்ணவே செய்யும். அது இம்சை. அந்த இம்சை பொறுக்க முடியாமே, அப்படிப் பட்டவர்கள், வேறு வேறு மார்க்கங்களிலே தங்கள் கவனத்தைத் திருப்புவாங்க. சில பேர், பக்தர்கள் மாதிரி ஆயிடுவாங்க. சில பேர், ரகசியமா திருப்பதி உண்டியலை நிரப்புவாங்க. சில பேர் பொதுக்காரியங்கள், பொது சேவை பண்ணுவாங்க. கூட்டங்களிலே பேசுவாங்க. டாக்டர் பட்டத்துக்கு முயற்சி பண்ணுவாங்க. இப்படி விசித்திரமா ஏதானும் பண்ணிக்கிட்டு இருப்பாங்க...''

''அர்த்தநாரி என்ன பண்றார்?''

''அனாதைப் பிள்ளைகளுக்கு உதவுகிறேன் பேர்வழின்னு, ஏதோ பண்ணிக்கிட்டு இருக்கார்.''

''அந்த வகையிலே, சில குழந்தைகள் சௌகரியம் அடையட்டுமே.''

அந்த இரவை, தன் பிளாட்டிலேயே செலவிட்டான் வள்ளி. விடிந்ததும் போகலாம் என்று நினைத்திருந்தாள்.

வீடுகள், உயிரற்றவை, அஃறிணைகள் என்று இலக்கணம் சொன்னாலும், நிஜம் அதற்கு முரண்பாடாகவே இருக்கிறது. பழகிப் போன மாடும், அம்மா என்று உறவு கொண்டாடுகின்றனவே. பழகிப் போன தாத்தா காலத்து நாற்காலி, தாத்தாவின் பெருமையில் பாதியை இரவல் பெற்று விடுகிறது. வீடுகளுக்கும் இது பொருந்தும்.

சண்முகம், வீட்டை, 'வீடு பேறு' என்பான். மோட்சத்துக்கும் வீடு என்று தானே தமிழில் சொல்வார்கள். வீட்டுக்கும் சொர்க்கத்துக்கும் என்ன ஒற்றுமை! சரியாகப் புரிந்து கொள்ளும் துணைகிடைக்கப் பெற்றால், வீடு சொர்க்கம். அல்லாது போனால், அது நரகம்.

தன் வீட்டை நோக்கினாள், வள்ளி. இது சொர்க்கமா, அன்றி நரகமா? இதில்தான், தொங்கத் தொங்கத் தாலி கட்டிக் கொண்டு, புதுமணப் பெண்ணாக நுழைந்தாள். இங்குதான், அவளது கன்னிமை, அவள் கணவனால் எடுத்துக் கொள்ளப்பட்டது. இங்குதான் அவன், மிஸஸ். அர்த்தநாரி என்று வளைய வந்தாள். இங்குதான் அவள் மனைவி என்பதன், பெண் என்பதன் அர்த்தத்தை அறிந்து கொண்டாள். இங்குதான் அவள் நிறைய மனச்சிக்கல்களை அனுபவித்தாள். இங்குதான் அன்னியர்கள், அவளுக்குப் புடைவைகள் கொண்டு வந்து கொடுத்தார்கள். இங்குதான், கௌரவம், அகௌரவம் ஆகிய சொற்களுக்கு அவள் அர்த்தம் புரிந்து கொண்டாள்.

இந்த வீட்டை விட்டு, அவள் போகிறாள். அவளுக்கு அழுகை வந்தது. அழுதாள்.

(தொடரும்)

# ஆனந்த தாண்டவ புரத்தில் வேத பாடசாலை

இண்டக்ரேடட் என்டர்பிரைஸின் நிறுவன டைரக்டரும் கும்பகோணம் பிரபல ஆடிட்டருமான திரு. N. பஞ்சாபகேசய்யர் ஆனந்த தாண்டவ புரத்தில் 30.3.97 ஞாயிறு அன்று யஜுர்வேத பாடசாலையை ஆரம்பித்து வைக்கிறார். மேலும் அன்றைய தினமே சக்தி வாய்ந்த கலியாண சுந்தரி பிரஹன்னாயகி சமேத பஞ்சவடீஸ்வர சுவாமி கோவில் லக்ஷார்ச்சனையையும் துவக்கி வைக்கிறார். விழாவில் வருமானவரி முதல் ஆணையாளர் திரு V. ஜெயராமன் கலந்து கொள்கிறார். பஞ்சவடீஸ்வர சுவாமி கோவிலுக்கு ஏராளமான நன்கொடையளித்த பரோபகாரரான டெக்கான் திரு. N.K. மூர்த்தி பொன்னாடை போர்த்தி கௌரவிக்கப்பட இருக்கிறார். இந்த ஊர் பஞ்சவடீஸ்வரசுவாமி கோவில் கும்பாபிஷேகத்திற்கும் "சோ" ராமஸ்வாமி போன்ற பத்திரிகையாளர்களும், டாக்டர்களும், உயர் அதிகாரிகளும் ஏராளமாகப் பண உதவி செய்ததானது ஸ்ரீ பஞ்சவடீஸ்வரசுவாமி மகிமையையும் சக்தியையும் வெளிப்படுத்துவதாக பல பக்தர்கள் கூறுகின்றனர்.

## வேத சாஸ்திர ரக்ஷணத்திற்கு ஓர் வேண்டுகோள்.

அத்வைத வித்யாசார்ய மஹாராஜா ஸாஹேப்
ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் புண்யஸ்மரண ஸமிதி (Regd)
42, காமாக்ஷி ஜோஸியர் தெரு, கும்பகோணம் - 612 001.

"வேதாத்யயனம் செய்யும் பாக்யமில்லாதவர்கள், வேதாத்யயனம் செய்துவரும் குழந்தைகளை போஷித்து ரக்ஷிப்பதன் மூலம் ஓரளவாவது தனது கடமையை நிறைவேற்ற முடியும். உயிருக்கு மேலாக நேசித்து பொருளை சம்பாதிக்கும் நாம், அதன் ஒரு பகுதியையாவது வேதாத்யயனம் செய்யும் குழந்தைகளை ரக்ஷிக்க அர்ப்பணிக்க வேண்டும்" என்று காஞ்சி ஸ்ரீ மஹாஸ்வாமிகள் உபதேசித்துள்ளார்கள். அவரின் மூதாதயர்களான ஸ்ரீ நாகமாம்பா ஸமேத பகவான் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் அவர்களால் கி.பி. 1542-ல் ஸ்தாபிக்கப்பட்டு தொடர்ந்து 455 ஆண்டுகளாக நடந்து வரும் ராஜா வேத காவ்ய பாடசாலையை மேற்படி ஸமிதியானது தாய்போல் இயங்கி காப்பாற்றி வருகிறது. தற்பொழுது 130 மாணவர்களுக்கு 15 வேத சாஸ்திர அத்யாபகர்கள் வேத சாஸ்திர வித்தைகளை புராதனமான குருகுல முறைப்படி போதித்து வருகிறார்கள். இப்புனித பாடசாலையை ரக்ஷிக்க கீழ்கண்ட திட்டங்களில் அனைவரும் பங்கு கொண்டு ஸ்ரீ வேத மாதாவின் அனுக்ரஹத்தால் ஸகல ஸ்ரேயஸ்களையும் அடைய வேண்டுகிறோம்.

| வ எண். | திட்ட விவரங்கள் | ஒரு முறைக்கான நன்கொடை துகை (Adhoc donation) | நிரந்தர வைப்பு நிதி 'Corpus Fund' |
|---|---|---|---|
| 1. | ஒரு வேளை ஸமாராதனைக்கு (பகுதி துகை) | Rs. 500 | Rs. 5,000 |
| 2. | ஸுமங்கலி ப்றார்தனா : ஸுமங்கலி ப்றார்தனைக்கு ரூ. 1000/- வித்யார்த்தி ஸமாராதனைக்கு ரூ. 500/- | Rs. 1,500 | Rs. 15,000 |
| 3. | அமாவாஸ்யை (அ) பௌர்ணமி (அ) த்வாதசி ஸமாராதனைக்கு | Rs. 1,500 | Rs. 15,000 |
| 4. | பௌர்ணமி ஆயுஷ்ய, நவக்ரஹ நக்ஷத்ர ஹோமம் | Rs. 1,000 | Rs. 10,000 |
| 5. | ஒரு வேதம் பயிலும் மாணவனின் பராமரிப்பு மாத செலவு ரூ. 1000/- | Rs. 12,000 P.A | Rs. 1 Lakhs |

Cross செய்யப்பட்ட D.D ஐ A.V.M.S.G.D.P.S. Samithi என்ற பெயரில் அனுப்புக் கோருகிறோம்.

**MAY VEDA MATHA BLESS US ALL**

## கல்கி - பாலு ஜுவல்லர்ஸ்
இணைந்து வழங்கும்
## வாரம் ஒரு சவரன்; போட்டி - 8; முடிவு

# ஆஹா!

### தங்கக் கோபுரங்கள்!

டார்ஜிலிங் போயிருந்தோம். விடி காலை நேரத்தில் ஒரு மலை முகட்டுக்கு அழைத்துச் சென்றார் கைடு, சூரியோதயத்தைக் காண. சூரியனின் கதிர்கள் புறப்பட்டு வருகிற நேரத்தில் எங்களை எதிர்ப் பக்கம் பார்க்கச் சொன்னார் கைடு. எதிரில் கஞ்சன்ஜங்கா சிகரம். எப்படி? மூடிய வெண் பனியெல்லாம் தகதகவென்று தங்கமயமாக ஜொலித்தபடி. சில நிமிடங்கள்தான் அப்படி. மறுபடியும் அது வெண்பனியாகி விட்டது. இருப்பினும் அந்த நிமிடங்களில் என்னை மறந்து போனேன்.

நா. முத்துசாமி, சென்னை-4.



* அமர்நாத் குகை வாயில்...

### மறக்கச் செய்த பாடல்!

தொழுநோய் ஆய்வாளர் பயிற்சி முடிந்து திரும்புகிற நேரம். டாக்டர்கள், நோயாளிகள் அனைவரும் கூடிய நிலையில் எங்களுக்குப் பிரிவு உபசார விழா. அதில் ஒரு நோயாளி 'இன்றைக்கு ஏனிந்த ஆனந்தமோ...?' என்ற சினிமா பாடலை உணர்ந்து பாடிய கணங்களில் நான் மட்டுமல்ல; அனைவருமே எங்களை மறந்து போனோம்.

சக்தி. முத்துகிருஷ்ணன், கிரனூர்.

### படபடப்பும் ஆனந்தமும்!

ஒரு புராஜெக்ட் செய்வதற்காகத் திருவனந்தபுரத்திலுள்ள இந்திய விண்வெளி ஆய்வுக்கூடத்திற்குச் சென்றிருந்தேன். அங்குள்ள ஹாலில் நிறைய விஞ்ஞானிகள் குழுமியிருந்தனர். ஆம், அன்றுதான் ASLV-D4 செயற்கைக் கோள் விண்ணில் செலுத்தப் பட்டது. கவுண்ட் டவுன் என்று சொல்லப் படும் இறுதி மணித்துளிகள்... 10,9,8.. என்று இறுதி விநாடி நெருங்க நெருங்க என் இதயம் வேகமாகத் துடித்தது. பிறகு வெற்றிகரமாக ஒவ்வொரு கட்டமும் முடிந்து செயற்கைக் கோளும் விண்ணில் சுழலத் தொடங்கியது. அந்த ஒரு மணி நேரமும்தான் என்னை மறந்த நேரம்.

ஜோதி, மதுரை-20.

### எத்தனை கோடி இன்பம் வைத்தாய்!

குடும்பத்தோடு காசி யாத்திரை சென்றபோது திரிவேணி சங்கமத்தில் சடங்கு செய்ய, யமுனை நதியில் படகுப் பயணம். அப்போது கூட்டமாகப் பறவைகள் படகின் அருகே பறந்து வந்தன. அவை தூய வெண்மை நிறம். கீழே வெண்மை நுரை பொங்கச் சுழித்தோடும் யமுனை. மேலே பனிச்சிடும் வெண்மையில் பறவைகள் கூட்டம்.

• இமாலயக் காட்சி...

இடையில் டிசம்பர் மாதத்துப் பனி மூட்டம்! 'ஆகா! எத்தனை கோடி இன்பம் வைத்தாய் இறைவா!' என்று மனம் லயித்து என்னையே மறந்தேன்.

செல்வி.கே.ஆர். சாவித்ரி, கும்பகோணம்-1.

## மறக்கச் செய்த குழந்தை!

எங்கள் வீட்டுக்கு எதிரில் ஒரு குடிசைப் பகுதி. அங்கே அடிக்கடி கணவன்-மனைவி சண்டைதான். ஒருநாள் நான் வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தபோது, அவர்கள் சண்டைக்கு நடுவில் புகுந்த சுமார் நான்கு வயதுப் பெண் குழந்தைக்கு நல்ல அடி. ஒரு வழியாகச் சண்டை ஓய்ந்து கணவன் ஒரு பக்கம்; மனைவி ஒரு பக்கம் என்று குடிசைக்கு முன்னாலுள்ள தெருவிலேயே படுத்துக் கொண்டனர். குழந்தையைக் கண்டுகொள்ளவேயில்லை. குழந்தையோ அடிபட்ட இடத்தில் தானாகவே ஒரு கட்டைப் போட்டுக் கொண்டது. சிறிது நேரம் ஏதோ யோசித்த குழந்தை குடிசைக்குள் நுழைந்தது. சாப்பிடத்தான் செல்கிறது என்று நினைத்த எனக்கு ஒரே ஆச்சர்யம்! ஒரு கிழிந்த போர்வை, ஒரு புடைவை ஆகியவற்றைத் தூக்க முடியாமல் தூக்கி வந்து தாய்க்கும் தந்தைக்கும் போர்த்தி விட்டு விட்டுத் தானும் நடுவில் படுத்துக் கொண்டு விட்டது. அந்தக் கணத்தில் என்னை மறந்து போனேன்.

சுசீலா மூர்த்தி, சென்னை - 108.

## இறைவன் வரைந்த ஓவியம்!

பாலக்காட்டிலுள்ள என் தங்கை வீட்டுக்குச் சென்றிருந்தேன். இரவு முழுவதும் லேசான மழை. காலையில் எழுந்து தோட்டத்துப் பக்கம் சென்றபோது என்னை மறந்து நின்றேன்! பவளமல்லிகை மரம் அத்தனை பூக்களையும் தரையில் உதிர்த்து விட்டு ஒரு ஞானிபோல் நின்றிருந்தது. இளஞ்சிவப்பு நிறத்தில் காம்புகளைக் கொண்ட அந்த வெள்ளை மலர்கள் தரையில் கிடந்த காட்சி இறைவன் எனும் ஓவியன் வரைந்த அற்புத ஓவியமாகவே பட்டது!

மாதவி பிரபாகரன், கோவை - 41.

## மறக்கச் செய்த மாமா!

இரண்டாவது உலக மகா யுத்தத்தில் இறந்து விட்டார் என்று அனைவரும் நினைத்திருந்த சமயத்தில் 1947 ஆகஸ்ட் 15 அன்று திடீரென்று எங்கள் வீட்டுக்கு வந்தார் எங்கள் மாமா லெப்டினென்ட் ராஜகோபாலன். அந்தக் கணத்தில் நான் மட்டுமல்ல; குடும்பத்திலுள்ள அனைவருமே எங்களை மறந்து நின்றோம்.

பி. கிருஷ்ணமூர்த்தி, புதுதில்லி-1.

# தங்களை மறந்த கணங்கள்!

ஒரு சவரன் பரிசு பெறுபவர்:
சுசீலா மூர்த்தி,
சீனியர் மானேஜர்,
எம்.எம்.டி.சி. லிமிடெட்,
7, எஸ்பிளனேட்,
சென்னை - 600 108.

## இன்னொரு காரைக்கால் அம்மையார்!

ஒருமுறை தொலைக்காட்சியில் அமர்நாத் யாத்திரையைக் காண்பித்தார்கள். அதில் இரண்டு கால்களும் சூம்பிய நிலையிலுள்ள ஒருவர் தம் கைகளைக் கொண்டு தவழ்ந்து போனார். அவர் 'பஞ்சதரணி' நதியில் நீராடிப் படிகளைக் கடந்து அமர்நாத் குகை வாசலை அடைந்தார். அங்கிருந்து தாம் கடந்து வந்த பாதையை அலட்சியமாக ஒரு பார்வை பார்த்துவிட்டு, தரிசனத்துக்காகக் குகைக்குள் நுழைந்ததைப் பார்த்தபோது என்னை மறந்து, 'இதோ ஒரு காரைக்கால் அம்மையார்!' என்று கூவினேன்!

ராதா ஸ்ரீராம், கோவை - 17.

## பெருந்தலைவரின் பாராட்டு!

நான் ஏழாம் வகுப்புப் படித்துக் கொண்டிருந்தபோது வயலுக்குச் சென்று வேலை செய்துவிட்டுத் தோளில் மண்வெட்டி சகிதம் திரும்பி வந்து கொண்டிருந்தேன். வழியில் 'நேரு வித்யாசாலை' எனும் படிப்பகத்தைத் திறப்பதற்காகக் காமராஜர் வர இருந்ததால் பெருங்கூட்டம். மண்வெட்டி சகிதம் ஓர் ஓரத்தில் நான். காரை விட்டு இறங்கிய பெருந்தலைவர், நேராக என்னிடம் வந்து, 'இந்த வயதில் வயலுக்குச் சென்று விவசாயம் பாக்கறியே! பரவால்ல' என்று உள்ளன்போடு என்னைத் தட்டிக் கொடுத்தார். நான் என்னை எப்படி மறக்காமல் இருக்க முடியும்?

ஆ. ஆறுமுகம், மதுரை-10.

## மறக்கச் செய்த சூறைக்காற்று!

எங்களது கிராமம். ஒருமுறை வெட்டப்பட்ட கரும்பு வயல்கள் பக்கம் சென்றிருந்தேன். அப்போது அடித்த காற்றில், வயலில் கிடந்த கரும்புத்தோகைகள் மேலெழும்பி ஒரு தூண் போல நின்று ஒரு சிறு சூறாவளிபோல் சுழன்று கொண்டே சென்றது. இயற்கையின் இந்த அற்புதத்தைக் கண்டு மறந்து நின்றேன்.

பி.ஆர். பாஷ்யம், சூலமங்கலம்.

## மறக்கச் செய்த வாழ்த்து!

நான் தாய்மை அடைந்திருந்த சமயம். மறுநாள் புத்தாண்டு என்பதால் முதல்நாள் இரவு நானும் கணவரும் ஒருவருக்கொருவர் வாழ்த்துத் தெரிவித்துக் கொண்டு தூங்கினோம். சரியாக இரவு பன்னிரண்டு மணிக்கு அவர் என்னை எழுப்பி, குடிக்கத் தண்ணீர் கேட்டார். நான் எடுத்து வர சமயலறைக்குச் சென்றபோது, சாக்லேட்டுகளுடன் ஒரு கவர். அதில் எனக்கும் என் குழந்தைக்கும் வாழ்த்துத் தெரிவித்து எழுதியிருந்தார் என் கணவர். அந்தக் கணம் நான் என்னையே மறந்த கணம்!

மீனா குமார், மதுரை-2.

## தவழ்ந்து வரும் சூரியன்!

நான் திருவான்மியூருக்குக் குடிவந்த புதிதில் எதிரே கடல் தெரியும். சில நாட்களில் ஒரு கார் லைட் மாதிரி சிவப்புப் புள்ளியாகத் தோன்றி, டார்ச் லைட் போல் விரிந்து; ஆரஞ்சு வண்ணத்தில் அழகாக மேலெழும் சூரியனைப் பார்க்கிற வாய்ப்புக் கிடைக்கும். அப்போதெல்லாம் என்னை மறந்து போவேன். இப்போது நிறையக் கட்டடங்கள் வந்து விட்டதால் அந்தக் காட்சியைக் காண இயலவில்லை.

ராணி உலகநாதன், சென்னை - 41.

## ஒளி வட்டத்தில் காந்தி!

கன்னியாகுமரிக் கடற்கரையிலுள்ள காந்தி மண்டபம். எதேச்சையாக நான் அங்கு சென்ற நாள் காந்தி ஜெயந்தி. உள்ளே சென்ற போது, மண்டபத்திலுள்ள காந்தி சிலை மீது சிறு ஒளி வட்டமாகச் சூரிய ஒளி. காந்தி ஜெயந்தி அன்று மட்டுமே இப்படி சூரிய ஒளி படுமாறு அமைத்துள்ளார்களாம்!

எஸ். மீனாட்சி சுந்தரம், மதுரை - 16.



''எங்க வீட்டு நாய்க்கு ரொம்பத்தான் அறிவுங்க...''

''எப்படிச் சொல்றீங்க?''

''எய்ட்ஸ் வந்துடுமோன்ற பயத்துல யாரையும் கடிக்கிறதில்லைன்னா பாருங்களேன்!''

— பொள்ளாச்சி கே. சித்ரா

உ

ஸ்ரீ ராமஜெயம்

தஞ்சாவூர் மாவட்டம் திருவிடைமருதூர் வட்டம்

**திருக்கோடிகாவல் கிராமத்தில் எழுந்தருளியுள்ள**

# ஸ்ரீவித்யா விநாயகர் கோயில் திருப்பணி

பேரன்புடையீர் வணக்கம்!

தெய்வத் தமிழ்நாட்டில் தஞ்சைத் தரணியில் ''தக்ஷிண கங்கை'' எனப் புகழ் பெற்று விளங்கும் காவிரி நதியின் வடகரையில் அமைந்ததும், மூன்று கோடி மந்திர தேவதைகளுக்கு மோக்ஷம் கிடைத்த பெருமை வாய்ந்த திருத்தலமாக விளங்கும் ஸ்ரீ திரிபுரசுந்தரி ஸமேத ஸ்ரீ திருக்கோடீஸ்வரர் கோயில் கொண்ட திருக்கோடிகாவல் கிராமத்தின் நடுவில் கோயிலின் வடபுறம் சிருங்கோத்பவ தீர்த்தத்தின் தென்கரையில் பிரணவ வடிவமாகவும், ஓங்கார வடிவமாகவும் விளங்கி வேண்டுவோர்க்கு வேண்டிய வரங்களை அள்ளித் தந்து அருள்பாலிக்கும் ஸ்ரீ வித்யா கணபதி திருக்கோயில் உள்ளது.

சங்கீதத்திலும் வயலின் இசையிலும் புகழ் பெற்று விளங்கிய திருக்கோடிகாவல் பிடில் கிருஷ்ணய்யர் இவ்விநாயகரை அன்றாடம் பூஜித்து தம் இசை புலமையில் தன்னிகரில்லா இடத்தை பிடித்தார் என்பது செவிவழி வந்த செய்தி. இவ்விதம் பக்தர்களுக்கு ஸர்வ சித்திகளையும் வித்யைகளையும் கொடுத்து அருள்பாலித்து வரும் ஸ்ரீ வித்யா கணபதியின் திருக்கோயிலின் கர்ப்பகிரஹம் மிகச் சிறியதாயும் கோபுரம் சிதிலமடைந்தும் உள்ளன.

பக்தர்களின் வேண்டுகோளின் பேரில் இக்கோயிலின் கர்ப்பகிரஹத்தை பெரியதாக கட்டி புதிய கோபுரம் அமைத்து சுற்றுப் பிராகாரமும் கட்டுவதாக பெரியோர்களால் நிச்சயிக்கப்பட்டு மேற்படி திருப்பணி தொடங்கப்பட்டு உள்ளது. திருப்பணி சிறப்பாக நடைபெற பக்தர்கள் அனைவரும் இத்ஸத்கைங்கர்யத்தில் பங்குபெற்று ஸ்ரீ வித்யா கணபதியின் அருளைப் பெற வேண்டுகிறோம்.

இங்ஙனம்,
**கிராமவாசிகள்**
திருக்கோடிகாவல்.

கைங்கர்யம் செய்ய வேண்டுவோர் அணுக வேண்டிய முகவரி :

**G. ராமச்சந்திரன்,**
பாஸ்காரராஜபுரம், திருவாலங்காடு (அஞ்சல்) 609 810
மயிலாடுதுறை R.M.S.



பிரார்த்தனை சமயங்களில் இங்கே 'ஆர்கன்' இசைக்கருவி வாசிக்கப்படுகிறது என்பதில் செய்தி ஏதும் இல்லை. ஆனால் நூறு ஆண்டுகளுக்கும் மேலாக அதே ஆர்கன் தான் வாசிக்கப்பட்டு வருகிறது என்பது தான் செய்தி.

# 100 ஆண்டாக ஒரே இசைக்கருவி

'தூய அந்திரேயா ஆலயம்' என்பதை விட செயிண்ட் ஆன்ட்ருஸ் சர்ச் என்றால் 'ஓ... அதுவா?' என்று சட்டென்று புரிந்து விடும். சென்னையில் பூந்தமல்லி நெடுஞ்சாலையில் தினத்தந்தி ஆபீஸ் அருகே 175 ஆண்டுகளைத் தாங்கிக் கொண்டு கம்பீரமாகக் காட்சியளிக்கிறது இந்த தேவாலயம்.

ஜார்ஜியன் பாணி தேவாலயக் கட்டடக் கலையில் அற்புத உதாரணமாக ஆசியாவில் இந்த சர்ச்சைக் குறிப்பிடுகிறார்கள்.

உள்ளே நுழைந்ததும் அந்த வட்ட வடிவ விதானம் 'சட்'டென்று நம்மைக் கவருகிறது. நீல நிறத்தில் பின்னணி... குவியல்களாய் நட்சத்திரங்களை வரைந்திருக்கும் அழகு... கோளரங்கு ஒன்றில் நுழைந்திருக்கும் பிரமை. இந்த வடிவமைப்பு இந்தியாவில் வேறெங்கும் இல்லை.

சென்னையில் அன்று இருந்த ஸ்காட்லாந்துக்காரர்களுக்காக உருவாக்கப்பட்டது இந்த தேவாலயம் என்கிறது வரலாறு. பின்னர் மற்றவர்களும் சேர வளர்ந்து வளர்ந்து இன்று பிராடஸ்டெண்டுகளின் பெருமைக்குரிய தேவாலயம்.

பழைமை இங்கே தீவிரமாகப் பாதுகாக்கப்படுகிறது என்பது உண்மை.

கைகளால் மட்டுமல்ல, கால்களாலும் இந்த ஆர்கனை வாசிக்க முடியும். ஈயம் மற்றும் மரத்தால் ஆன நீண்ட குழாய்களின் மூலம் காற்று இசையாகி, காதுகளில் புகுந்து ரீங்காரமிடுகிறது.

இந்த தேவாலயத்தில் தொடர்ந்து பல ஆண்டுகள் இந்த இசைக் கருவியை இயக்கிப் பெருமை பெற்றவர்கள் இரண்டு பேர். ஒருவர் விக்டர் பரஞ்சோதி. 1906லிருந்து 61 ஆண்டுகள் வாசித்திருக்கிறார். இன்னொருவர் நமக்கெல்லாம் நன்கு தெரிந்த அங்கிள் ஹான்டல் மானுவல். இரண்டு பேருக்கும் இங்கே கல்வெட்டுகள் பதிக்கப்பட்டிருக்கின்றன. இப்போது அருள்சிரோமணி இசைத்துக் கொண்டிருக்கிறார்.

ஞாயிறுகளில் மட்டுமே இங்கே பிரார்த்தனைக்கு மக்கள் வருகை. மற்ற நாட்களில் தேவாலயம் சார்பாக பல்வேறு சமூகப் பணிகள்.

இக் கட்டடத்தை உற்றுப் பார்த்தால் 175 வயதின் முதுமை சில இடங்களில் தென்படவே செய்கிறது. அங்கங்கே விரிசல்கள். சீர்செய்யும் பணி தொடங்கி விட்டது.

மேஜர் தாமஸ் ஃபியோட்டி ஹாரிலாண்ட் என்பவர்தான் இதன் என்ஜினியர். 6.4.1818ல் அடிக்கல் நாட்டப்பட்டு மூன்று வருடங்களில் கட்டி முடித்து 25.2.1821ல் பொது ஆராதனைக்குத் திறந்து விடப்பட்ட செய்தி கல்வெட்டில் பொறிக்கப்பட்டுள்ளது.

உண்மையில் இந்த தேவாலயத்துக்கு போன ஆண்டே 175 முடிந்து விட்டது. ஆனால் இந்த ஆண்டுதான் தபால்தலை வெளியிட்டது டில்லி.

**- ராணிமைந்தன்**

பரதன் அச்சகத்தில் அச்சிட்டவர் : வி. முரளி, பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் : கி. ராஜேந்திரன். ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; சந்தா, விளம்பரம் : 2345622; மானேஜிங் டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - விமானத் தபால் : ரூ. 525/-.

கதிரவனின் கதிர்களில் குளித்து எழுந்த பகுதியிலிருந்து...

# புத்தம்புதிய உயர்தரமான சமையல் எண்ணெய்




# KKR

## சூரியகாந்தி எண்ணெய்

டபுள் ரிஃபைன்ட்

**இலவசம்!**

ஒரு எவர்சில்வர் டம்ளர் ஒரு எண்ணெய் பாட்டிலுடன் அல்லது இரண்டு பாக்கெட்டுகளுடன்



சரக்கு உள்ள வரை மட்டும்

கோடிக்கணக்கான இல்லத்தரசிகளின் எதிர்பார்ப்பின் நிறைவேறுதல் !

சமையலின் தரத்தையும், உடல் நலத்தையும், குடும்ப ஆரோக்கியத்தையும் விரும்புகின்ற கோடிக்கணக்கான இல்லத்தரசிகளின் இரகசியம் KKR சூரியகாந்தி எண்ணெய் தான்.

KKR சூரியகாந்தி எண்ணெய் ! ஆம். சுவையை அதிகமாக்கி அசல் ருசியை தருகிறது. கொழுப்புச்சத்து இல்லாமல், புரத சத்துக்கள் அதிகமாக இருப்பதால் உடலில் ஆரோக்கியத்தை ஏற்படுத்துகிறது. உங்கள் எதிர்பார்ப்பு புதிய KKR சூரியகாந்தி எண்ணெய் தான்.




உயர்தரமான சமையல் எண்ணெய்
உயர்ந்த தரத்தை விரும்புவோர்க்கு !



**KKR ஆயில் & எடிபிள்ஸ்**
(டிவிசன் ஆஃப் SBW லிட்.)
126, Dr. இராதாகிருஷ்ணன் சாலை,
மைலாப்பூர், சென்னை-600 004.
Ph : 8548393, 8548394, 8548395

ADEPT/KKR/5/97

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / MS (S) M4392 * Licensed to post without prepayment under PMG's Licence No. TN / MS/ (S) 161 * Registered as a Newspaper in Srilanka